## நந்தீஸ்வரர் நிகண்டு 300.

இதில் உப்பு இன்னதென்றும், வீரம், பூரம், வெள்ளைப் பாஷாணம் என்று சொன்ன சரக்குகளின்னதென்றும் அதினால் வசாரம் முடியுமென்றும், மூலிகை யென்ற சரக்குகளின் விபரமும், ஓம் என்றதின் பொருள் இன்னதென்றும் இன்னும் அநேக பரிபாஷைக ளெல்லாம் விபரமாகச் சொல்லி யிருக்கிறது.

புத்தகம் 1 க்கு விலை அணா 0—8—0

## உரோமரிஷி பரிபாஷை 300.

இதில் பரிபாஷைப் பெயர்களை விளக்கிக் கூறியிருக்கிறது, இவர் பாடிய நூல்கள் அனேக மிருப்பினும், வைத்தியம் 500 என்றநூல் மட்டுந்தான் அச்சிட்டு வெளிவந்திருக்கிறது இன்னும், கூடியசீக்கிரத்தில், இவரால் பாடிய சாஸ்திரங்கள் அச்சிட்டு வெளிவரும், இப்பொழுது இந்த பரிபாஷை 300 அச்சிட்டு தயாரிலிருக்கிறது.

புத்தகம் 1 க்கு விலை அணா 0—8—0

## கோடாங்கி மாலை. 1-2 பாகங்கள்

இது கோடாங்கி அடிப்பவர்களுக்கும், சுவாமி அருள் பொங்கிக் குறிசொல்பவர்களுக்கும் சுவாமி ஆடிகளுக்கும், ஆருடம் சொல்பவர்களுக்கும், பேயோட்டுபவர்களுக்கும், முத்துக்குறி சோதிடம் பார்ப்பவர்களுக்கும் முக்கியமானது. பலதேவதைகளின் பெயர்களும் கிராமங்களின் பெயர்களும் குறிசொல்லுகிற விபரங்களும் ஆங்காங்கு தெளிவாக யாவரும் அறியும் வண்ணம் கூறியிருக்கிறது.

பாகம் 1-க்கு விலை அணா 0—3—0

அருணகிரிநாத சுவாமிகளால் இயற்றிய

## பெரிய கந்தரனுபூதி

யந்திர மந்திர சக்கர பூஜாவிதிகளுடன் கூடியது.

புஸ்தகம் 1-க்கு விலை அணா 0—3—0

உ

பரமபதி துணை.

பதினெண்சித்தர் நூல்களிலுள்ள

மறைப்புக்கெல்லாம்

திறவுகோலாகிய

# அகத்தியர்

# கௌமதி நூல் 400.

மதுரை வித்வான்

த. குப்புசாமி நாயுடு அவர்களால்

பரிசோதிக்கப்பெற்று

மதுரை, புதுமண்டபம் புத்தகஷாப்

இ. ராம. குருசாமிக்கோனார் சன்

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி குருசாமிக்கோனார் தெரு

ஸ்ரீராமச்சந்திரவிலாசம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை 1935 ரூ. 1-4-0



உ

பரமபதிதுணை.

பதினெண் சித்தர் நூல்களிலுள்ள மறைப்புக்கெல்லாம்
திறவுகோலாகிய

அகத்தியர்

# கௌமதி நூல் 400.

காப்பு.

சிவகிருபை பாதமது போற்றி நானும்
தெரிந்தெடுத்துப் பதினெண்பேர் மறைத்தல்யாதும்
தவம்பெறவே கௌமதி நூல் பாடல்நானூறில்
சாற்றினேம் வைத்தியங்கள் யோகம்ஞானம்
நவமதுவாம் லோகமுறை நீத்தல்வாதம்
நாடினேஞ் சரிகைமுதல் கிரிகைமார்க்கம்
பவமரவே யின்னூலில் கதைமூன்றென்றில்
பாடினேங் கணபதிதாள் காப்புத்தானே. (1)

குட்டத்துக்கு மருந்து.

குட்டமொடு பதினெட்டுச் சர்வநோய்க்கும்
குடியோட்டுந் தகர்தீண்டாய் பானைதன்னை
இட்டமுடன் கொண்டுவந்து சாயம்நீக்கி
துதிக்கை விநாயகர்க்குப் பூசைசெய்து
கட்டமதா யொருசாம மரைத்துவாங்கிக்
காரெள்ளி னெண்ணெயிலே படிதானொன்று
விட்டதிலே சிறுதேங்கா யளவுபோட்டு
மெழுகுபத மாகநீ வடித்துக்கொள்ளே. (2)

வடித்ததொரு தைலத்தின் போக்குக்கேளு
மகோதரங்கள் ரத்தசயங் குறைநோயெல்லாம்
வெடித்ததொரு கிரந்தியரை யாப்புப்புந்து
மேகத்தால் விளையுகின்ற தடிப்புப்பத்து
அடித்துவிடு முண்மையிது அரன்மேலாணை
அப்பனே யிந்நூலை வெளிவிடாதே
குடித்தபின்பு ரசம்புளியை மாற்றும்போது
குணமாகும் நாற்பதுநாள் தன்னிற்பாரே. (3)

பாரப்பா கௌமதிநூல் மார்க்கந்தன்னை
பார்தனிலே குட்டநோய் புண்கண்டோர்க்கு
நேரப்பா யிருபதுநாள் பதிநானகாக
நீயுமிதை அந்திசந்தி கொள்வாயாகில்
காரப்பா கைவளிநீர் கரிக்கிச்சேர்த்து
கருதியே கொண்டிடவே புளியுப்பாச்சு
கூரப்பா நீர்ச்சூட்சமறிந்து நீயும்
கொண்டிடுவாய் வியாதியெல்லாங் குணமதாச்சே. ()

ஆச்சப்பா குட்டமென்ன செய்யுமார்க்கம்
அப்பனே கௌமதிநூ லாயுள்தீர்க்கம்
நீச்சப்பா பலநூலும் பார்த்தபேர்க்கு
நீயறிந்தா லிதுவுமொரு வோடமாச்சு
மாச்சலப்பா ஒன்றுமில்லை இந்நூல்பார்த்து
மருந்துசெய்தால் வியாதியிரு லெமனுலென்ன
சூட்சமப்பா யின்னமொன்று விபரமாகச்
சொல்லுகிறே னுற்றபொருள் சூலைநோய்க்கே. (5)

சூலைக்கு.

சூலைநோய் சர்வதுக்குஞ் சாந்தமாக
சொல்லுவோம் ராசாளி யிலைதானெச்சி
நீலமடைப் பாளைவேப்பிலை மடக்கிச்சாறு
நேர்சமனாய் நாலுவகைப் படிகாலாக
காலமே யொருபோது உண்பாயாகில்
கர்மவினை யால்விளைந்த மூடக்குச்சூலை
ஓலமெனப் பறந்தோடும் அரன்மேலாணை
உரைத்திட்டோங் கௌமதிநூ லுண்மைதானே. ()

அண்ட வாய்வுக்கு.

உண்மைதா னின்னமொன்று முருங்கைச்சாற்றில்
உத்தமனே மனம்வெறுத்த யிலுப்பைக்கட்டி
வண்மைகெட அக்கினியி லெரியப்போட்டு
மைந்தனே தீப்பிடித்த சபையம்பார்த்து
கண்மைபோல் முன்சொன்ன இலைநீர்விட்டு
கடுகவே அரைத்துருட்டிக் கழற்சிக்காய்தான்
வெண்மையுள்ள செந்தவிட்டில் பிரட்டிக்கொண்டு
விடையன்மே லாணையுண்மை விபரங்கேளே. (7)

கேளப்பா யின்னூல்போ லொருநூலில்லை
கெட்டிகெட்டி கெட்டிசோர் வினாவிரோதி
பாளப்பா மூன்றுநா ளாறுபோதில்
பறப்பதற்குச் சமையமென்ன சொல்லப்போறேன்
தூளப்பா நிற்றூளாய்ப் பறக்கும்பாரு
சூட்சமிது அண்டத்தின் வாய்விளேடு
மீளப்பா யிப்படியே குடிகெட்டோடும்
விரட்டிவிடு மயன்விதியும் விலகிப்போச்சே. (8)

போச்சப்பா ரசம்புளியை யாற்றும்போது
பொருக்காட்டால் கைவளிநீர் பாகங்கூட்டு
வாச்சுதப்பா வயித்தியற்கு யின்னூல்மார்க்கம்
மைந்தனே அண்டவாய் வெல்லாம்போச்சு
காச்சுதப்பா யிந்தமுறை யரன்மேலாணை
கண்கெட்டோ ரிதையறிந்து பார்க்கமாட்டார்
தீச்சுட்ட பஞ்சதுபோற் குடிகெட்டோடத்
தீர்க்கமப்பா யின்னூலின் செயல்கள்தானே. (9)

விஷத்திற்கு.

தானான பழந்தின்னிப் பாலைச்சாராய்ச்
சாற்றினார் முன்னோர்கள் பதினெண்பேர்கள்
ஆனாலு நாமுனக்கு வெளியாய்ச்சொன்னோம்
அப்பனே வேப்பம்புண் ணாக்குவாங்கி
கானாக மாந்திருகு கள்ளிப்பட்டை
கனத்ததொரு மேல்தொலியி லிடைதான்ரெண்டு
தேனாகங் காஞ்சூரைக் கனியின்வித்தை
தேடிவந்து குளித்தயில மிறக்குவாயே. (10)

இறக்குதற்கு இன்னமொரு வகைதான் கேளு
என்மகனே புண்ணுக்கு ஓட்டிரெட்டி
திறக்கவே திருகுகள்ளிப் பட்டைபோட்டு
தீமூட்டிக் குளிதாழி தன்னிற்போட்டு
விறக்கமது போகாமல் கவசம்பூசு
வெந்தவுடன் குளித்தயிலம் விளம்பக்கேளு
சிறக்கவே சேராடித் தூரில்பொத்தி
தீக்குளியை நாடாமல் கலசம்வையே. (11)

வைத்ததொரு கலசத்தின் தயிலம்வாங்கி
மைந்தனே நிராசிலிட்டுக் கனியின்வித்து
ஒத்திடவே நிறுத்திடு ரெண்டுஞ்சேர்த்து
உத்தமனே காஞ்சிரங் குச்சிகொண்டு
மத்திப்பாய் பழையசட்டி தன்னிற்போட்டு
வகையதுதா னென்னசொல்வேன் செகத்துள்ளோர்க்கு
சித்தியா கும்படிக்கு வெளியாய்ச்சொன்னேம்
சிவனாணை யிதையறிந்து தெளிந்துகொள்ளே. (12)

கொள்ளுதற்கு நெய்வடித்துத் தாம்பூரத்தால்
குழல்சிமிள்தான் செய்தடைத்துக் கொண்டுநீயும்
விள்ளுதற்குப் புத்திமுறை விளம்பக்கேளு
வியாதியுற்ற பேர்கள்வந்து விளம்பினுக்கால்
தள்ளுதள்ளு யெனவுரை நீ வெளிவிடாதே
சற்குருவா யிருந்துகொண்டு தாசர்க்கெல்லாம்
எள்ளளவு அணுவளவு பாதரட்சைக்
கீய்ந்துநீ சலந்தனிலே சுத்திசெய்யே. (13)

செய்யப்பா அடக்கமதாய்ச் செய்துகொண்டு
செகந்தனிலே வியாதியுற்ற பேர்கட்கெல்லாம்
வைப்பா பிரம்புனுனி தன்னில்நீயும்
வையகத்தி லிந்தமுறை வழக்கமானல்
வெய்யவனு முனைவணங்கித் தாசனுவான்
வியாதியுற்ற வவன்தனக்குக் கையில்சற்றே
வய்யமற அணுவளவு அடக்கம்பண்ணி
அப்பனே அரசனுக்குஞ் சலத்திலூட்டே. (14)

ஊட்டப்பா யிப்படி நீ வித்தைமதமாக
    உத்தமனே விஷமரண மானபேர்க்கு
தீட்டப்பா பிரம்புகொண்டு முதுகிலேதான்
    தீட்டியபின் மடித்தஉடன் திரைதான்கட்டி
மாட்டப்பா அவன்சிரசு தன்னிலேதான்
    மைந்தனே மருந்துதொட்டு சிரசில்வை நீ
மூட்டப்பா உறங்கியெழுந் திருந்தான்போல
    ஓடியே யெழுந்திருப்பா னுரஞ்செய்வானே. (15)

உரஞ்செய்வா னிங்குவந்த வகையேதென்பான்
    உத்தமனே விஷமரண மானமார்க்கம்
பரமொன்று மறியாமல் மயானந்தன்னில்
    படுத்திருந்த மாய்கையென்ன பலரேயென்பான்
திறஞ்சென்ற சித்ததனை வெளிவிடாதே
    சிவதவத்தால் திருப்பிவிட்டோ மெனவுஞ்சொல்லு
அறந்தழைக்கத் தையல்மின்னார்க் கடக்கமாக
    அருளினேன் கௌமதிநூ லறிந்துபாரே. (16)

வசியம்

பாரப்பா யிந்தமுறை மையைநீயும்
    பார்தனிலே கீரைவித்து தன்னில்பூசி
சேரப்பா உரம்போட்டு விரைத்து நீயும்
    தெளிவான கொக்கிறகை நடுவேநாட்டு
நீரப்பா நல்லசல மடைத்துப்பாரோர்
    நாழிகையில் முளைத்தெழுந்து கீரையாச்சு
தேரப்பா கொக்கிறகு கருக்கலாச்சு
    தேகமதில் நரைதிரைதான் தியங்கிப்போச்சே. (17)

போச்சுதப்பா மூன்றுநா ளாறுபோதில்
    போனதொரு கொக்கிறகை யெடுத்துக்கொண்டு
வாச்சுதப்பா உந்தனுக்கோர் வசியமார்க்கம்
    மைந்தனே மங்கையர்கள் வலக்கால்மண்ணை
நீச்சுட்டாப் போலெடுத்துக் குழலுக்குள்ளே
    சீக்கிரத்தி லடைத்திடுவாய் திருமின்மாதே
பேச்சுண்டோ யென்னசொல்வேன் உனைக்கண்டோர்கள்
    பிடித்திழுப்பா ருன்னுயிரைப் பேணிக்கொள்ளே·()

கொள்ளுவா யின்னூலின் மார்க்கந்தன்னை
கோவேந்த னுனக்குநிகர் பெரியோரில்லை
விள்ளுவா யிந்தமுறை யெவர்க்கானாலும்
வெளிவிட்டா லுனதுசிரம் கொய்துமீள்வாய்
தள்ளுவா யடங்கோபம் ரெண்டும்நீக்கி
சம்புசிவ னாணைமுறை சத்தியமாகி
முள்ளுவா யூசிமுனை தொட்டுமையை
நோய்களுற்ற பேர்க்குமுன்போல் நோக்குவாயே. ()

நோக்குவா யிந்தமுறை மாந்தரீகம்
நோக்குதற்கு யேகாட்சர மகிமைபோல
தாக்குவாய் பாதரட்சை குறட்டிற்கையில்
சஞ்சரித்தா லாயுதத்தில் பிரம்பில்பின்னும்
போக்குவா யெந்தஅவுழ் தத்தில்நீயும்
போக்கியதைச் சலந்தனிலே கரைத்துப்போடு
நீக்குவா யிவனுடைய கர்மநோயை
நிவர்த்திசெய்ய மயமுடைய வியனீர்கேளே. (20

வியமுடைய தேனதனை நாய்ப்பாலென்று
விடையமிட அறியாதான் பலநூல்பார்த்து
சயமுடைய கொடியோர்க்கு மருந்துசெய்து
தனம்பரித்துச் சாத்திரத்தை பொய்யென்பார்கள்
மையிதனை யறிந்தவர்க ளுலகிலில்லை
மைந்தனே நீயறிந்தா லடக்கிக்கொள்ளு
அயனரிமால் மும்மூர்த்தி யரன்மேலாணை
அப்பனே சயநோவுக் கறிவிப்பேனே. (21)

சயத்திற்குச்சூரணம்.

சயரோகஞ் சருவதுக்கு மருந்துகேளு
சாரமுள்ள கடுக்காய்தான் களஞ்சிநாலு
நயமுடைய திப்பிலிசித் தரத்தைநோய்
நலமான வால்மிளகு ரெட்டிதான்சேரு
செயமுடைய சாதிக்காய் களஞ்சிமூன்று
சேர்த்தப்பா வருத்துநீ தூள்தான்செய்து
வியமுடைய தேனதிலே யருந்தும்போது
விமலன்மே லாணையுண்மை விரட்டும்பாரே. (22)

விரட்டுமடா சயரோகம் ரத்தமேகம்
மேல்கனப்பு ஊதுகா மாலைசோகை
வரட்டுமடா அஸ்திசுரம் யிளைப்புக்காந்தல்
வாந்தியொடு மருந்தீடு அண்டவாய்வு
பிரட்டுமடா குடல்வாய்வு மூலவாய்வு
பெருமேகங் கிராணிதச நோவுசேர
மூரட்டுமடா யின்னாலே வெளிவிடாதே
மூலத்தா ராணையுண்மை மொழிகிறேனே. (23)

மொழிகிறேன் தகாமதூ விருச்சமான
முரட்டுமர மானகரு வேலாதன்னில்
அழுகியே வழிந்தொழுகும் பிசினைவாங்கி
அரிமால்தன் அக்கினிப்பை துருசுகூட்டி
குளியகனி யாமேதை பனம்பழமாமென்று
கூறினார் முன்னோர்கள் கனியைக்கேளு
களியதொரு யெலுமிச்சம் பழமாமிந்தக்
கருவதனை நாம்வெளியாய் வகைசொன்னோமே. ()

கண் மாத்திரை.

சொன்னதொரு முன்மருந்து ரெண்டுஞ்சேர்த்துச்
திராசினிலே நேர்சமனாய் நிருத்துக்கொண்டு
கன்னலெனு மெலுமிச்சம் பழச்சார்விட்டு
கடுகவே யொருசாம மரைத்துக்கூட்டி
வன்னமணி போலாகக் கயறுதிட்டி
மைந்தனே படரவிழி லடரவைத்து
சொன்னபடி யின்னமுநீ கேட்பாயாகில்
துராகிருத நார்மரப்பால் செயநீர்தேடே. (25)

தேடப்பா நார்மரப்பால் முலைப்பால்தேடித்
தேடியதோர் பாலதனில் முலைப்பால்கிரி
ஆடப்பா பத்தொன்ப தாறுநோய்க்கும்
அப்பனே காசமெல்லா மறுமேநாசஞ்
சூடப்பா யிதுபோலே வேறொன்றில்லை
சுருக்காக யின்னமொன்று சொல்லக்கேளு
ஓடப்பா கண்ணுழைச் சலத்தைவாங்கி
ஒளியிருளின் படலமருத் தோடுங்காசே, (26)

காசநோய் சர்வத்துக்கு மருந்துகேளு
கண்ணூடிச் சலமதனைப் பஞ்சில்தாக்கி
நேசமுள்ள சந்திரனுக் கிவாயப்பா
நேசமுள்ள கோப்பைதனில் சலமங்கூறும்
வாசமுள்ள சவ்வாதுபண விடையுஞ்சேர்த்து
வாங்கிவிடு நேத்திரத்தின் வியாதிக்கெல்லாம்
நாசமதாய்ப் பறந்தோடும் அரன்மேலாணை
நாட்டிலின்னா லொருவருக்கு மீயொண்ணாதே. (27)

ஒண்ணான அயனாணை திருமாலாணை
உத்தமனே யின்னூலை வெளிவிடாதே
கண்ணான நோவதுதான் தொண்ணூற்றாறில்
காசநோய் தீராத தெண்ணான்குக்கும்
விண்ணான மானதொரு கிரணச்செயநீர்
விடையமிடக் கிட்டாட்டால் குளிகைமார்க்கம்
பண்ணாக நாம்வெளியாய் நன்றாய்ச்சொல்வோம்
படியறிந்து நோவுகளைக் குணமாய்த்தீரே. (28)

பிளவை நோய்க்கு

தீராத மூளைக்கிரந்தி யிரப்பிளவையப்பா
தீர்க்கவென்றால் கடுக்காயை வெந்நீர்விட்டு
சாராக அரைத்துருட்டிச் சாமைச்சோற்றில்
சாப்பிடவே மூன்றுநா ளாறுபோதில்
வேராகத் தூரத்து அப்பாலேகி
விழுந்துவிடுங் கடுக்காயி லேழுநீயும்
நேராக அரைத்துருட்டிக் கொள்வாயாகில்
நிவர்த்தியப்பா ரசம்புளியை மாத்துவாயே. (29)

மாத்திடவே ஆறுநாள் தன்னில்பாரு
மைந்தனே யோண்டத் தயிலமூழ்கு
சூத்திரமாங் கடுக்காயின் குணத்தைக்கேளு
சொல்லென்றால் கற்பமதின் முதலேயாகும்
நேத்திரம்போற் சொல்லிவிட்டே னின்னூல்தன்னில்
நேர்மையாய்த் தெளிந்துகொள்ளு யோகஞானம்
சூத்திரமா யின்னூலை வெளிவிடாதே
அகத்தியர்நூல் கௌமதியி னருமைபாரே. (30)

பாரப்பா மூலிவகை தொண்ணூற்றுறு
பாசாணக் கட்டுவகை யீரெட்டாகும்
ஆரப்பா அறிந்தவர்கள் ஒருவரில்லை
அப்பனே அருணகிரி வெளியாய்ச்சொன்னான்
நேரப்பா யிதற்கிணையாய்ப் போகநாதன்
நிச்சயித்துச் சொல்லிவிட்டா னொருநூல்தன்னை
வீரப்பா வழலைவிந்து நாதமார்க்கம்
வெண்டிரை நீர் மும்மதத்தின் பனியினீரே. (31)

நீரான சத்துப்பு பனிநீர்வித்து
நீயறிந்து அக்கினிப்பைக் கீவாயாகில்
நேரான கயிலாசச் செயநீர்தன்னை
நீயுமிழ்ந்து அணுவளவு கொடுத்துப்பாரு
வேரான பூனீர்போல் வெண்மையாகும்
வேண்டியதைப் பச்சிலையில் சத்தில்லாத
தூரான வஸ்துவதில் கொடுக்கும்போதில்
துத்தியிலை விராலியிலை கணக்கச்சாரே. (32)

நரைதிரைமாற்ற.

சாரான முப்பூவின் வழலைதன்னை
தனித்துநீ அணுவளவு உமிழ்நீர்தொட்டு
நேராக முன்னுரைத்த விஷைமைக்கீய்ந்து
நீநிலத்தில் கீரைவித்தில் தடவிக்கொண்டு
சீராக முன்னுரைத்த படி நீபாகம்
சித்தியா மதையறிந்து தெரிந்துகொண்டால்
பாராளும் வேந்தருனக் கெதிரோவப்பா
பரமசிவ னாணையுண்மை பகர்ந்திட்டோமே. (33)

பகர்ந்திட்டோ மின்னமொன்று வெகுவாய்ச்சொல்வோம்
பார்தனிலே மும்மதத்தின் செயநீர்தன்னை
அகர்ந்திட்ட மாகவே யடக்கிக்கொண்டு
அப்பனே பனிநீரில் வாகுகிவித்தை
நிகர்ந்திட்ட மானதொரு தண்டின்கீரை
நீயறிந்து எடுத்துமுதல் செயநீர்தன்னில்
முகர்ந்திட்ட முப்பூவின் வழலைதொட்டு
முக்கியமா யுரம்போட்டு நிலத்திற்பாவே. (34)

பாவிநீ செலமிறைத்து மூன்றுநாளும்
    பார்தனிலே புழுக்கையெனும் பெருப்பொருக்கு
யேவிவிடா மற்படிக்குக் கார்ப்பாபாகில்
    என்மகனே நாதாக்கள் செல்லமாட்டார்
ஆவிதனை யடக்கியவ ரெறும்புபோல
    அப்பனே வந்தரிப்பா ரதைநீகண்டு
தூவிவிடு சுடுகாட்டுச் சாம்பல்தன்னை
    தூவியபின் முளைக்கமட்டுங் காத்துங்கொள்ளே. ()

கொள்ளப்பா யிந்தமுறை கைவிடாதே
    கொடுமைசெய்வார் பதினெண்பேர் திருட்டுரெம்ப
உள்ளதப்பா நாமுனக்கு வெளியாய்ச்சொன்னோம்
    உத்தமனே நாதாக்கள் தெரிந்துகொண்டு
கள்ளமப்பா யித்தொழிலின் கொடுமைதன்னை
    காரணத்தை என்னசொல்வே னுலகத்தோர்க்கு
தள்ளப்பா முன்சொன்ன வயித்தியமெல்லாம்
    சஞ்சரிநீ யிந்தமுறை தனக்குத்தானே. (36)

தானமிரு வாசுகியாங் கீரைதன்னை
    தலைந்தருத்து லவணமிட்டுப் பாகம்பண்ணி
தேனென்ற மதுரமுறை பாகமாகச்
    செய்துநீ யன்னமதி லூட்டிக்கூட்டி.
ஏனென்று நீகேட்பாய் தேகந்தன்னை
    இளகியதோர் நரைதிரையுங் கருத்துப்போச்சு
வானென்ற ஆகாசந் தன்னைக்காண
    மைந்தனே பரமவெளியுந் தெரியலாச்சே. (37)

ஆச்சுதப்பா யிந்தமுறை கைகண்டாச்சு
    அப்பனே நரைதிரையும் வாங்கிப்போச்சு
பேச்சப்பா என்னசொல்வேன் தந்தம்வீழ்ந்தால்
    பின்னுமறு படிமுளைக்கும் பிறந்ததேகம்
வாச்சப்பா ஆதியந்த வகையைமாறி
    மைந்தனே தேகமது யிறுகிப்போச்சு
சாச்சுதப்பா மூன்றுபோ துண்டுபாரு
    சம்புசிவ ஞானியின் னூல் சாற்றொண்ணாதே. (38)

ஒண்ணான யின்னூலே உண்மையாக
உரைத்துவிட்டோ மாயிரத்தி யிருநூறுமார்க்கம்
பண்ணான கருமறைத்தல் யோகஞானம்
பார்தனிலே வாதவித்தை வசியமார்க்கம்
நண்ணாக நாலிலொன்றாய் வெளியதாக
நாமுரைத்தோம் நீயறிந்து நயந்துகொண்டு
விண்ணான மாயிதை நீ வெளிவிடாமல்
விடையன்மே லாணையுண்மை விரும்புவாயே (39)

சூலைக்கு.

வாயென்ற வாகையிலை தன்னைவாங்கி
மைந்தனே தனிச்சாறு பிழிந்துகொண்டு
மாயென்ற எண்ட யெண்ணெய்தனில்
மைந்தனே சரிசமனாய்ப் படிதானாக்கி
சீயென்ற வரோசிகத்தை விட்டுநீக்கி
தினசரிநீ அந்திசந்தி மூன்றுபோது
தாயென்ற வேப்பெண்ணெய் ராசாங்கந்
தனித்துரெண்டும் நேர்சமனாய் கலக்கிக்கொள்ளே ()

கொள்ளுதற்கு யின்னமொரு வகைதான்கேளு
கூறினேன் மூவாகையிலைச் சார்வேப்பெண்ணெய்
விள்ளுதற்கு யிந்தமுறை இதில்வேறில்லை
விதவிதமாய்ப் பாடியிதில் முடக்குச்சூலை
துள்ளுண்டே ஓடுமடா வீக்கந்தூக்கம்
துண்டித்துச் சிதறிவிடும் ஒருபோதுண்ணு
தள்ளிவிடு ரசம்புளியை நீதானப்பா
சஞ்சரிக்க லாகாட்டால் செயநீர்கூட்டே. (41)

கூட்டப்பா மும்மதத்தின் செயநீர்தன்னை
கூறியது கருமறைத்தல் தெரியாவிட்டால்
மூட்டப்பா உப்பிலாச் சாதம் நீயும்
மூன்றுநா ளாறுபோ இந்தப்போக்கு
மாட்டப்பா சாரெண்ணெய் ரெண்டுஞ்சேர்த்து
மைந்தனே அயன்விதியும் விலகிப்போச்சு
ஆட்டப்பா யிப்படி நீ சூலைநோய்க்கு
ஆறுக்கும் வெளியாக்குமா யிதத்தின்போக்கே (42)

போக்கியபின் னெரண்டத் தயிலமூழ்கு
பூலோகத்தொருவருக்கும் வெளிவிடாதே
பாக்கியமா யின்னூலைப் பதனம்பண்ணு
பார்தனிலே வயித்தியத்துக் கின்னூல்தன்னில்
யோக்கியமா யிதற்கிணையாய் வேறொன்றில்லை
உத்தமனே கண்காணக் கொடுப்பாயாகில்
சாக்கியபஞ் சாட்சரத்தைப் பொடித்துப்போட்டு
தாம்பூர பற்பமென்று தாக்கிடாயே (43)

சாத்துதற்கு யென்னசொல்வேன் மகாராஜாக்கள்
தனக்குவந்தா லிப்படி நீ செய்வாயாகில்
தோத்திரத்தை யறிந்துகொண்டா லுண்மையாகக்
கொள்ளவுமே மாட்டார்கள் கோபஞ்செய்வார்
மாத்திரமே வென்றுசொல்லார் மூழுமூடர்க்கு
மைந்தனே துய்யபஞ்சாட் சரத்தைநீயும்
நீத்தினமாஞ் சொர்ணபற்ப மென்றுபோடு
நீநிலத்தில் விஷமறுக்கும் விஷமதாச்சே. (49)

விஷத்துக்கு

விஷவித்தை கைகண்ட தொருபோக்கப்பா
வெளுத்ததலை கெருடநகம் விழிசிரசுமூஞ்சி
நிசவித்தை கீரியுட றுறட்டிப்பல்லு
நேத்திரத்தின் விழிதலையின் மூளைநாக்கு
வசவித்தை கொடிக்கள்ளிப் பாலாலாட்டு
மைந்தனே யெருக்கம்பால் சரியாயூட்டு
அசனத்தில் தயிருஞ்சோ றருந்தியாட்டு
அப்பனே குண்டுமணி யளவுகூட்டே. (45)

கூட்டப்பா குண்டுமணி யளவுதாக்க
கொடியதொரு வல்விஷத்தின் குணத்துக்கெல்லாம்
நாட்டப்பா ஆண்பெண்மார் சிறுநீர்தன்னில்
நலமான மாத்திரையில் பாதிநீட்டு
பூட்டப்பா மூன்றுபோ தளவுமட்டும்
பிரியாமல் சீவன்சுழியில் சிக்கிநிற்கும்
மாட்டப்பா விஷமான மானபேர்க்கு
மைந்தனே ரகசியத்தில் மருந்தையூட்டே. (46)

ஊட்டப்பா யிம்மருந்தை உமிழ்நீர்தொட்டு
உத்தமனே செப்புபிர ணவத்திலே
ஊட்டப்பா யிரையளவு பூட்டிப்பாரு
உறங்கியவ னெழுந்திருந் தவன்போலாவான்
சாட்டப்பா சிவகிருபை யென்றேசொல்லு
தாரணியிற் சிவனாணை வெளிவிடாதே
நாட்டப்பா பிரமவிதி தட்டி நீயும்
நடப்பதற்கு யிந்தமுறை நாம்சொன்னோமே. (47)

சொன்னவகை யின்னமொரு விபரங்கேளு
தோகையர்க ளெவரேனும் விஷத்தில் மாண்டால்
அன்னரதி அவள்மேனிதன்னில் நீயும்
அடித்துப்பா ரவள்மேனி தடிக்குமப்பா
முன்னென்ன வகைசிலாகை முறைநான்மெத்த
உத்தமனே திரைக்குவடக் குலகத்தோர்கள்
பின்னமன்றிப் பேசாமல் மனம்வேகாமல்
பிதற்றும லெழுப்பிவிட்டுப் பின்னுங்கேளே. (48)

பின்னுங்கே ளிக்கருவை வெளிவிடாதே
பிரபலமாய்க் கற்புமட மாதருண்டு
தன்னுள்ள குடத்துயிரை மாய்த்துக்கொள்வார்
சண்டாளத் தத்துவமாய்த் தவிப்பாய்பாரு
முன்னுரைத்த வகைப்படியே மறைத்தல்செய்து
முக்கியமாய் நீயெழுப்பு தலங்கள்சேர
பண்ணுதமிழ் கௌமதிநூ லின்னூல்தன்னை
பார்தனிலே யொருவருக்கும் பகரொண்ணாதே. ()

அரையாப்புக்கு.

பகரொண்ணா தின்னமொரு வகைதான்கேளு
பார்தனிலே ஆமையரை யாப்புக்கேதான்
தகர்தின்னும் பாளைதனைக் கொண்டுவந்து
சற்குருவா முப்பூவின் வழலைதொட்டு
நிகரநன்று யரசிலைபோ லவித்துமேலே
நீயரைத்துப் பூசிடப்பா ஆப்பின்போக்கு
புகலொண்ணா திவ்வசன முறையின்போக்கு
புகலுதற்கு வழலையது கிட்டிடாதே. (50)

கிட்டிடா தரும்பொருள்தான் பூப்புஉப்பு
கிட்டினூ னுந்தனுக்கு நோயுந்தோற்கும்
அட்டிசெய்யு மெமனனுக மாட்டானப்பா
அரிதிதனு லனுடானை மார்க்கஞ்செய்வான்
கெட்டிகெட்டி யின்னூல்போ லொருநூலில்லை
கிடைத்தவர்கள் சிவகிருபை படைத்தாராகும்
கட்டிதிர ளரையாப்பு புரைபுத்தெல்லாம்
கரைப்பதுவு மிதுவுமல்லா லதினங்கேளே. (51)

அதினமப்பா பனங்கொட்டை நண்டுக்காலாம்
ஆப்புஅரை யாப்புப்புண் மேகக்கூட்டம்
பதினமெனுஞ் சாரப்பா போடல்வீக்கம்
படுஞ்சுளுக்கு கொளுக்கட்டை மூட்டான்தோரு
விதனமப்பா அரணைவலி பாிக்கால்வீக்கம்
வெளுமையுள்ள பள்ளப்பு கோழிமுட்டை
பதினமப்பா மனமான புணத்திறற்றம்
பேரான பதினெட்டுக் குட்டமாப்பே. (52)

ஆப்பான மேகமரை யாப்புக்கேதான்
அப்பனே அமுரிச்சார் சிறுநீர்விட்டு
வாப்பான குரோதிவியின் சுனைப்புவார்த்து
வழுத்துகிறேன் புளிச்சியிலை தன்னைவாங்கி
சாப்பாய்நீ யொருபடி நீர் அமுரிச்சாற்றில்
தாக்கிடுவாய் முன்சொன்ன யிலைநீரப்பா
பேய்போச்சு பலம்பத்து அவியலாகப்
புட்டவிய லாயவித்துப் பொருக்கக்கட்டே. (53)

கட்டப்பா பொருபொருக்கக் கட்டி நீயும்
கட்டிமறு போதவிழ்த்துப் பார்க்கும்போது
சட்டப்பா ரொன்றுமில்லை தெரித்துப்போச்சு
தாரணியி லிதுவிட்டா லொன்றுமில்லை
வட்டப்பா கிரணப்பரை யாப்புக்கட்டு
மாரியடித் தொடுக்கிவிக்கும் வாளதாச்சு
சொட்டப்பா புட்டவிய லிலையென்பார்கள்
தூஷணிப்பா ளாப்புகளைத் தூரத்தும்வாளே. (54)

வாளான மேகஅுரை யாப்புப்பாழாம்
மைந்தனே யிதையறிந்தால் ரோகம்பாழாம்
தூளாகு மென்னசொல்வேன் அமுரிச்சாற்றில்
சூட்சமது உரையார்கள் சிறுநீரென்று
பாளாகு யாப்புரா சாளிவஸ்து
பறக்குமப்பா யிதையறிந்து பாகஞ்செய்யில்
கோளான புளிச்சியிலே யனுப்பானத்தில்
குடியோட்டுங் கௌமதிநூல் கூறினேமே. (55)

கூறினே மரையாப்பு பதினெண்நோய்க்கும்
குவலயத்திற் கருவறிய மாட்டான்மாடு
தேறியிதை யறியார்கள் பலநூல்பார்த்துத்
தெரியார்கள் கருமறைத்தல் கண்கெட்டோர்கள்
நீறியதோர் பற்பமுறை கற்பமுண்ண
நிச்சயிப்பார் கண்ணவிந்த கழுதைமாந்தர்
தூறியதோர் மருத்துவம்போல் சுமடுகட்டித்
திரிவார்கள் வைத்தியர்கள் சென்றுபாரே. (56)

பேரான வயித்தியர்கள் பலநூல்பார்த்துப்
பேறறிய மாட்டார்கள் மூப்புவுப்பு
ஆராலுங் கூடாது பதினெண்பேர்கள்
அந்தரங்க மாயுரைத்தேன் நாதமென்பார்
நேராக நாமுனக்கு வெளியாய்ச்சொன்னோம்
நீயறிந்து யிந்நூலை யடக்கிக்கொள்ளு
தீராத நோய்வேது எதிர்நில்லாது
தீதகற்று மதனகா மியநெய்கேளே. (57)

மதனகாமிய நெய்.

மதனகா மியவகையி நெய்யைக்கேளு
மைந்தனே செவ்விளநீர் தோடுபோக்கி
பதனமது சாதிக்காய் சீரகத்தைத்தாக்கி
பசுவின்பால் படிவிட்டுப் புட்டவியலாக்கி
விதனமது போகாமல் சட்டிமூடி
மேல்கவச மண்பூசி யெரியிட்டேதான்
எதனமது வாகயிரு நான்குவாரம்
எடுத்துலர்த்தி வைத்தபின்பு பாகங்கேளே. (58)

கேளப்பா கொடுப்பைச்சா ரெட்டிசேர்த்து
கெடிரவியில் வைத்துலர்த்தி வஸ்திரகாயம்
தூளப்பா செய்துகொண்டு நறுநெய்விட்டு
தித்திப்புக் கினிசீனி சரியாய்ச்சேர்த்து
நாளப்பா படரவியில் வைத்து நீயும்
நாட்டியே மண்டலங்கால் சென்றுபாரு
வேளப்பா மன்மதவேள் பதங்கமாச்சு
விளம்பக்கே ளதிலுமொரு விசையுண்டாச்சு. (59)

அதிமதுரச் செயநீர்

விசைமிச்ச மான அதி மதுரந்தன்னை
வேண்டியரைத் துலாய்வாங்கி மிடாவிற்போட்டு
பசையறவே யிடித்திடுவாய் சலந்தானப்பா
படியொன்று பலமொன்று சரிநீர்சேரு
விசையறவே தீயெரித்துக் கவசம்பூசி
வேகமது போகாம லடக்கிக்கொண்டு
நசையறவே தயிலமது மருதுவாசம்
நாடும்போ ததையறிந்து எடுத்துப்பாரே. (60)

எடுத்துப்பா ரதிமதுரச் செயநீராச்சு
என்மகனே திரிதிரித்துத் துவைத்து நீயும்
கொடுத்துப்பார் விளக்கிலே பிடித்துக்கொள்ளும்
குவலயத்தி லிதையறிந்தோ ரெவர்தானப்பா
அடுத்தடுத்து உனைவணங்கி யிந்நூல்கேட்பார்
அரளுணே யவர்க்கின்னு லீயொண்ணாது
விடுத்துமுறை முன்பதங்கந் தனக்குநீயும்
விடையமறிந் ததிமதுரச் செயநீர்சேரே. (61)

தாதுபுஷ்டிக்கு

சேரப்பா முன்சொன்ன பதங்கந்தன்னில்
சேர்த்து நீ சுண்டக்கா யளவுகொள்ளு
ஆரப்பா உனக்கீடு சொல்லப்போறேன்
அப்பனே உன்திரேகம் அழகுண்டாச்சு
வீரப்பா மதுரவீ ரென்ன சொல்வேன்
வீரியமாய்த் தாதுபுஷ்டி வித்தையாச்சு
காரப்பா யிந்நூலைக் கார்த்துக்கொண்டு
கருதிநீ மண்டலந்தா னுண்டுதேரே. (62)

உண்டுபார் தாதுபுஷ்டி வர்த்தமானம்
உலகமதில் கௌமதியில் வெளியாய்ச்சொன்னேம்
தொண்டுபண்ணி யிந்நூலைக் கிரகிப்பார்கள்
சிவனாணை உமையாணை திருமாலாணை
கண்டுகொள்ளும் படிக்குநீ வெளிவிடாதே
கருமறைத்த அந்தரங்கம் பின்னேசொல்வோம்
விண்டுவிட்டோ மீரெட்டுக் கலைகள்சேர
விரும்புவா யிந்தமுறை மதவேள் நீயே. (63)

நீயப்பா திங்குகண்ட வஸ்துகாரம்
நீயெடுத்து லேகியத்தி லனுத்தான்சேரு
காயப்பா வகைதுகையும் வெளியாய்ச்சொல்வோம்
கண்டுகொள்ளு வாதமுறை தன்னில்தேர்ந்து
ஆயப்பா அதையறிந்து எடுத்துவந்து
அனுப்பானஞ் சேர்த்திடுவாய் ரூபமாயம்
தாயப்பா யிந்நூல்தான் வயித்தியர்க்கு
தாரணியி லறிவுபெறச் சாற்றினேமே. (64)

சாத்துகின்ற வகைப்படிக்கு வேள்பதங்கந்
தனையெடுத்து மதனமுறை சரியதாகச்
சேர்த்துநீ பின்னுரைக்குந் திங்குசேர்த்து
தெளிவுகண்டு மண்டலமே சரியாய்க்கொள்ளு
மாத்திரமே யல்லாது வேறென்றில்லை
மதனகா மியவகையின் பதங்கந்தின்று
பார்த்தவுட னழகுசவுந் தரியமாச்சு
பார்தனிலே அயன்விதியும் விலகிப்போச்சே. (65)

போச்சப்பா அழகுமதன் நாணிப்போனன்
பூவுலகில் கண்டோர்கள் தியங்கிப்போனர்
மாச்சப்பா உன்திரேகம் காணுமந்தி
மதிமயங்கி விதிகுலைந்து மருகிப்போனர்
காச்சப்பா யிப்படியே மதவேள்சத்து
கண்டோர்க ளுன்மேலே பாசமாக
பாச்சப்பா மன்மதவேள் திரேககாந்தி
பலித்ததிது வாமெனவே பாலிப்பாயே. (66)

பிரசவத்திற்கு

பாலிப்பா யென்னசொல்லப் போறேனப்பா
பார்தனிலே யிளைத்ததொரு தேகமெல்லாம்
ஆலிப்பார் போற்கனக அழகுண்டாகும்
அப்பனே யென்னைசொல்வே னுனதுதேகம்
சோலிப்போக் கொன்றுமில்லை மறைவுமில்லை
சிவனாணை உமையாணை திருமாலாணை
சூலிகளா மங்கையர்கள் வாதைப்பட்டால்
சுண்ணமயம் போலிலையிற் தடவுவாயே. (67)

தடவுவாய் வெத்திலையில் மதவேள்பாணந்
தையல்மின்னார் சிசுவினால் வாதைப்பட்டால்
கடவுள்நஞ்சை யருந்தீசன் லபியாற்கொல்ல
கடாட்சமுற்ற தவவிதியு மிதனாலேதான்
சடவுபெற அலுத்துவிட்டு ஓடிப்போச்சு
தையல்மின்னா ரிம்மருந்து கொண்டபோது
விடவும்விடா மற்படிக்கு யீவாயாகில்
மெல்லிநல்லாள் குழந்தைபெற்று கருதிவாழ்வாள். ()

கருதவொண்ணா தபடிக்குக் கடையிற்காந்தம்
கண்டறிந்து மனோசிலையும் புறாவின்முட்டை
கிருதமப்பா யுன்தேகந் தனிலுண்டாச்சு
கூர்ந்துபா ரரதமட்டை யட்டைதன்னை
மிருதமப்பா மனோசிலையி நாசிவாசி
மித்திரத்தை யறியாதான் சத்துமூன்றும்
விருதமப்பா செவிமெழுகு யெடுக்கமாட்டான்
விருதாவி லுயிர்வதைத்துப் பழிசெய்வானே. (69)

பழிசெய்ய வோவுனக்குப் பதினெண்பேரும்
பாடினார் முன்னூலின் கருவின்மார்க்கம்
வெளிசெய்ய அறியாமல் பலநூல்பார்த்து
விருதாவாய் கர்மமதி லுறையவேண்டாம்
வழிசையோ கத்தினின்ற மதனவாளின்
மைந்தனே நூலின்முறை வழக்கந்தன்னை
களிசெய்யும் படிமுறைநாம் வெளியாய்ச்சொன்னோங்
கருத்துகந்து யிதையறிந்து அடக்கிக்கொள்ளே. ()

அடக்குவா யிந்நூலை வெளிவிடாதே
அப்பனே ஆயிரத்தி யிருநூறுதன்னில்
நடக்குமுறை சர்வசித்தும் வெளியாய்ப்பாடி
நாதாக்கள் நூல்தோறும் ஒளித்துப்போட்டார்
விடக்குமுறை யென்றுசெப்வான் பிணத்தைத்தேடி
விருதாவில் தயிலமுறை வடிப்போமென்று
திடக்கிடா தென்றுநினை யாமல்துஷ்டர்
தேடிமன மலைந்துலைந்து திரியலாச்சே. (71)

ஆச்சப்பா கைகண்ட நூலிதாச்சு
அப்பனே அந்தரங்கம் வெளியதாச்சு
மாச்சலப்பா ஒன்றுமில்லை மதனவாளின்
மைந்தனே தேகசித்தி யோகசித்தி
சூச்சமப்பா நான்சொன்ன படியேமுப்பு
செய்திடுவாய் சகலசித்துங் கைகண்டாச்சு
வாய்ச்சமர்த்தி லொன்றுமில்லை செய்துபார்த்தால்
மைந்தனே நூல்முறையை வழியாய்க்கேளே. (72)

கேளப்பா சதுரமா னதிலேசேர்ந்த
கிருதயப்பா நானூற்று நாற்பத்தெண்ணேய்
பாளப்பா கௌமதினூ லாலேநாசம்
பரசிவ ஞானயுண்மை பகரொண்ணாது
வாளப்பா யிந்நூலைச் செகத்தில்வைத்து
மைந்தனே வயித்தியசித் தாதியாக
ஆளப்பா யென்னசொல்வேன் யோகிக்காச்சு
அப்பனே யிதுபார்க்கி லறிவுண்டாச்சே. (73)

வாய்வுக்கு.

ஆச்சப்பா யென்னசொல்வே னின்னங்கேளு
அப்பனே ஆவின்பால் படிகால்வாங்கி
காச்சப்பா சுத்தசலஞ் சரியாய்விட்டு
காய்ச்சுதற்கு வாயடக்கி யகோரிமூலம்
பேச்சப்பா யென்னசொல்வே னுலகந்தன்னில்
பேசுவார் வெள்ளுள்ளி யென்றுசொல்வார்
மாச்சலப்பா ஒன்றுமில்லை நெருப்புமூட்டி
மைந்தனே தீயெரித்து வாங்கிக்கொள்ளே. (74)

வாங்குதற்கு யின்னமொரு வகையைக்கேளு
மைந்தனே சுடரவியுந் தீயைவாங்கி
பாங்குரவே பத்தவைத்து யெரியிட்டேதான்
பாலில்விட்ட சலமறவே வற்றக்காய்ச்சி
தீங்கென்ற வாய்வுநூற் றெட்டும்போச்சு
சிவனாணை உமையாணை திருமாலாணை
ஏங்குவா ரின்னூலின் வகையைக்கண்டால்
என்மகனே பொய்யுரைக்கத் திகைத்திடாதே. (75)

திகைத்திருக்கப் பொய்ப்பிட்டைத் தாயென்றெண்ணு
தெருவில்வந்தால் பிரளிதனைக்குருவென்றெண்ணு
பகைத்திருப்பா ரின்னூலை யீயாவிட்டால்
பகையறவே யிவனுடனே நயந்துகொள்ளு
நகைத்திருந்து எரித்தெழுந்த அரன்மேலாணை
நாட்டிலுள்ளோர்க் கின்னூலை வெளிவிடாதே
தகைத்திருந்து அறுந்துவிழுங் கிரணத்தீயைச்
சாற்றினேம் பிரணவம்நீ யறிந்துகொள்ளே. (76)

கொள்ளப்பா யிந்நூலை யுண்மையாகக்
கொள்ளாட்டா லுன்தேகஞ் சர்வநாசம்
தள்ளப்பா முன்சொன்ன முறையைவீணாய்த்
தள்ளிவிடத் தகுதியுனக் குண்டேயாகில்
உள்ளப்பா வசமுனக்கு வெளியாய்ச்சொன்னேம்
உத்தமனே சுகசன்னி வகைக்குச்சொன்னேம்
விள்ளப்பா மாமரலி யெமன்வந்தாலும்
விதிவசத்தை மாற்றிவிடும் விபரங்கேளே. (77)

சுகசன்னிக்கு

விபரமப்பா வெளியுரைத்தோங் கருமதோஷம்
விளைந்தவர்கள் கோடான கோடிபேர்கள்
கபரமப்பா மனமாய்கை யிருளை நீக்கிக்
கருதியதோர் தீபவொளி யறியாமூடர்
உபரமப்பா வைங்காய வகையின்சற்று
உரமறிய மாட்டார்க ளுலகத்தோர்கள்
துபரமப்பா மாரணத்தின் திருக்குமூலம்
தொகுப்பதுபின் சுகசன்னி வகையைக்கேளே. (78)

சுகசன்னி யாலறிவு கெட்டபேர்க்கு
சொல்லுவேவாம் வேதொன்று வொருபோக்கப்பா
நிகநன்றி யாந்திருகு கள்ளிச்சோறு
நீர்வத்தா தரைத்துலா மெடுத்துவந்து
தகமான தண்ணீருஞ் சட்டிக்குள்விட்டு
தாக்குவாய் தீயெரித்துச் சுட்டதானல்
நகமிட்டுப் பார்க்கவே பொருக்கும்போது
நாடியே தாக்கிவைத்து வேதையூத்தே. (79)

ஊத்தப்பா சிரசதிலே வேதைநீதான்
உயிர்கொண்டு போகயெம னலுமாகா
காத்தப்பா மயில்விசிறி கொண்டேவீசு
கருத்ததொரு பல்லுகளும் விழியும்நேராம்
ஏத்தப்பா நாசியிலே சுண்டைவேர்த்தாள்
எழுந்திருந்து வாய்புலப்பம் புலம்பலாவான்
மாத்தப்பா ஔசதத்தின் குணத்தினலே
மைந்தனே மூலிகைச்சார் வழூத்துறேனே. (80)

வழூத்துகிறேன் கேள்பிலா விருச்சமான
மகாசன்னி முருங்கைவேர்ப் பட்டைசமூலம்
கொளுத்திருகு மேனிச்சார் குப்பைமேனி
கொரேியெனுந் தைவேளைச் சாறுகாங்கை
வெளுத்தமுறை பதர்நீக்கி யிஞ்சிச்சாறு
வேண்டியே நேர்சமனுய் வகைதான்வீசம்
அழூத்துவாய் நாலுமொன்ருய்த் துவாலைபாதி
அப்பனே அயன்விதியும் விலகலாச்சே. (81)

ஆச்சப்பா வசம்புகடுக் காய்தான்கோட்டம்
அதிவிடையம் பச்சைமஞ்ச ளிவைதான்சேர
பூச்சப்பா காரீயத் தகட்டில்நீயும்
பூசியமுன் னுயிரெழுத்தி லிடமதாக்க
வீச்சப்பா நினைத்ததொரு பேரைச்சுற்றி
விரையவே வரைந்துநே ராகச்சேரு
போச்சப்பா உயிரதுதான் கோட்டைவிட்டு
போகுமுறை ரேகைவிதி புகலலாச்சே. (82)

ஆச்சப்பா கற்பமுறை பின்னுஞ்சொல்வேன்
அழியாம லிருப்பதற்கு யோகமார்க்கம்
நீச்சப்பா கூகமதிற் கெண்டிதூக்கி
நீனிலத்திற் சிவப்போக்கித் தவத்தைவாங்க
சூச்சப்பா வென்றுமயம் நன்றாய்ச்சொன்னோம்
சொன்னதின்னால் முன்னூறும் பாடல்நூறில்
காச்சப்பா கைவளிநீ ரவியின்தீயில்
காய்ச்சுதற்கு யாலமதக் கருநீகேளே. (83)

மாலமதங் காலமதஞ் சோலமதமூன்றும்
வகையான பனியுப்பே முப்பூவாகும்
நீலமுகி லரிமாலுக் கீவாயாகில்
நீத்தினத்தில் நீருவிட்ட வகைபோலாகும்
ஆலவிட மூண்டசிவன் விடைதன்னாணை
அப்பனே யின்னூலை யார்க்குங்காட்டாய்
மூலபில மறிந்தவரா ருலகிலில்லை
முத்தவளைச் சேரவிந்து நாதங்கேட்பார். (84)

கேட்பார்கள் நாதவிந்து முதற்சாதியென்பார்
கேடுகெட்ட பலபாடம் படித்துக்கொள்வார்
மீட்பார்கள் வீரமது பூரங்கூட்டி
மீனவெயில் படரவியில் வைத்துக்கொண்டு
நாட்பார்த்துக் கணிதமுறை செய்கைபார்த்து
ராசியென்று மதனநூல் சரியும்பார்ப்பார்
ஆட்பார்த்தா லவர்களுமே கழுதைமாடு
அப்பனே உந்தனுக்கு அருளக்கேளே. (85)

முப்பூ விபரம்.

கேளப்பா வழலைகுரு மார்க்கந்தன்னை
கெதிகெட்டான் மதிகெட்டா னுலகந்தன்னில்
மீளப்பா அரிவையர்கள் சூதநீரை
நிச்சயித்து வூணதனைச் செப்புக்கின்னம்
பாளப்பா அதைத்தேடி யதுக்குள்ளாக்கி
பலன்தேடிக் கர்மவினை யதனைத்தேடி
கூளப்பா ரெத்தமயக் கூழுபோலே
கொண்டுவரு வானல்லால் மாலங்கேளே. (86)

மாலேமதஞ் சோலேமதங் காலேமதமூன்றும்
வகையான பனியுப்பே கரியுப்பாகும்
வாலேமதம் வித்ததுவாங் கடலேதன்னே
வகைதெரிந்து நீர்படியி லொருபத்திய்ந்து
பாலேமத மாய்ரவியில் வைத்தாலுப்பு
பரமவித்தை வாதமுறைக் குருவாமித்தை
வேலமத உப்புயிரு நூற்றுக்கொன்று
வீதமது தவருத மாயமீயே. (87)

மாலமதம் வித்ததிலே விளையும்பூச்சி
மைந்தனே அறிந்தவரா ருலகத்தில்லே
வாலமத வித்ததிலே பதரை நீக்கிப்
பகுத்தறிந்து தெரிந்திடவே புழுவொன்றுண்டு
ஆலமத வாதவித்தைக் குருவிதாச்சு
அப்பனே வெண்டிரை நீர் கட்டிதாச்சு
நீலமத விந்துமுதற் சரக்குக்கெல்லாம்
நீத்தினத்துக் காமெனவே நிகழ்த்திஞேமே. (88)

நிகழ்த்திஞே மிதையறிந்தால் வாங்கிவந்து
நீனிலத்தில் விஷப்பனிநீர் தன்னேவாங்கி
யுகத்திலே யொருவருக்கும் வெளிவிடாமல்
உத்தமனே மூன்சொன்ன புழுவைப்போடு
செகத்திலே வாதவித்தை கைகண்டாச்சு
சிவயோக மார்க்கமெல்லா மரியலாச்சு
அகத்திலே யிதையறிந்தா லடக்கிக்கொள்ளு
அப்பனே விதிமுறையின் படிநீபாரே. (89)

செய்பாகம்.

பாரப்பா முன்சொன்ன புழுவைப்போட்டு
பாருப்பு கல்லுப்பு இரண்டுமாச்சு
ஆரப்பா அறிந்தவர்கள் உலகத்தில்லே
அப்பனே வாதவித்தை பிரட்டொன்றில்லே
நேரப்பா யின்னூல்போ லொருனூலில்லே
நீனிலத்தி லுந்தனுக்கோர் குருவுமில்லே
வேரப்பா ரிசிமூலங் கனகப்பூச்சி
விளம்பிஞேங் கல்விமய விபரந்தானே. (90)

தானென்ற ஆணுவத்தை விட்டுநீக்கு
 தாரணியிற் றீங்குசென்ற கடலைப்பூச்சி
மானென்ற ரதிமதனு மானும்போல
 மைந்தனே ஒன்றுசேர்ந் திருக்கும்பாரு
நானென்றால் வெளியுரைத்தேன் போகநாதன்
 நாடியிதைத் தீங்குசென்று மறைத்துப்போட்டார்
பானென்ற மன்மதவேள் விந்துவாலே
 வந்ததப்பா கடலைவித்தில் விகாரமாச்சே. (91)

விகாரமதுக் காகுமுறை சொல்லக்கேளு
 விடையமதை யறிந்தவரா ருலகத்திலலை
வகாரமது செய்தவர்க்கு பிணைச்சல்பூச்சி
 மைந்தனே எடுத்துவந்து மதனச்செயனீர்
அகாரமதுக் கீய்ந்திடவே யீரைந்தோர்நாள்
 அப்பனே சென்றுபார் மூப்பூவாச்சு
சகாரமது எட்டெட்டுச் சித்துண்டாச்சு
 சாற்றினேன் கௌமதிநூ லடக்கிடாயே. (92

அடக்கப்பா யின்னூலை வெளிவிடாதே
 அப்பனே மும்மதநீர் கட்டும்பூச்சி
மூடக்கப்பா சுருண்டிருக்குங் கிரணம்போல
 மூடியதோர் வஸ்துவதை யெவர்தான்கண்பார்
நடக்குமப்பா அகமறிந்து செய்யும்பேர்க்கு
 நாட்டிலில்லை யின்னூல்போல் வெளியொன்றில்லை
படக்கப்பார்க் கடங்காது கிரணமாய்கை
 பார்த்தவுடன் வாதமுறை கைகண்டாச்சே. (93

ஆச்சப்பா தீங்கிஷத்தின் பூச்சியாலே
 அப்பனே கல்விமய மதனச்செயனீர்
காச்சப்பா ரவியில்வைத்து உப்புண்டாச்சு
 கண்டுகொண்டால் வாதமுறை கைகண்டாச்சு
பேச்சப்பா யேதுண்டு யீசன்பாதம்
 பெறுவதற்கோ யிதிலுமொரு வெளியுமாச்சு
மாச்சலப்பா வொன்றுமில்லை முன்னுஞ்சொன்னேம்
 மைந்தனே யின்னமொரு வகைதான்கேளே. (94

கேளப்பா யிப்படிக்குச் செய்வாயாகில்
கெருவமென்ன சொல்வதுவு மூலகத்தோற்கு
ஆளப்பா யின்னாலே வெளிவிடாதே
அப்பனே மூப்பூவின் கற்பமார்க்கம்
தூளப்பா அணுவளவு உமிழ்நீர்தன்னில்
துரும்புகொண்டு தொட்டுநீ லோகங்காய்ச்சி
மீளப்பா பத்தரைமாத் ததிகங்காணும்
விதிதெரிந்து மதியறிந்து மீண்டுபாரே. (95)

கற்பமுறை.

பாரப்பா அணுவளவு கற்பங்கொண்டு
பார்தனிலே கடுகுநல் லெண்ணெய்நீக்கி
நேரப்பா நிதமுமிப் படியே நீயும்
நேர்சமனாய்க் கொண்டிடுவா யெமனாலென்ன
சாரப்பா உலகமதிற் சிவனாலென்ன
சார்ந்தவுடன் வருஷமொன்றிம் முறையேசெய்யில்
கூரப்பா தேகமது கல்கூடாச்சு
கொடியதொரு பிரமலபி தட்டலாச்சே. (96)

ஆச்சப்பா அயன்விதியைத் தட்டலாச்சு
அப்பனே மாலியெமன் கணிதம்போச்சு
பேச்சப்பா என்னசொல்வே னின்னூல்தன்னில்
பேருபெற்ற கொங்கணவர் பெரியோர்முன்னாள்
சூச்சப்பா வகமறிந்து கற்பமுண்டு
சிவகிருபை யைக்கண்டு மனத்தினாலே
ஏச்சப்பா விசைபெறவே கனமாயுண்டு
எப்போதுங் கல்லுருவாய் நிலைநின்றாரே. (97)

நிலைநின்றா ரப்படியே நீயுமுண்டு
நீநிலத்திற் கல்லுருவாய் நிலைநில்லாமல்
வலையறவே அணுவளவு கற்பமுண்டு
மைந்தனே வருஷமொன்றில் லபியைத்தட்டு
புலையரவே மனமாய்கை யிருளைத்தள்ளி
பூமிதனில் மும்மதப்பால் மதனப்பாலால்
சூலமரணஞ் செய்மாலி விதியைத்தள்ள
கொள்ளுவாய் கேதாரக் கல்லுதானே. (98)

தானென்ற கல்லுப்பு மதுபானத்தில்
தாக்குவா யாவின்பால் கரந்தமேனி
கோனென்ற மாவேந்தர் யெவருங்கொள்வார்
கொண்டபின்பு திருமகளுங் குடியாய்நிற்பாள்
கூனென்ற அடம்லகிரி ரெண்டும்நீக்கி
சிவனாணை உமையாணை திருமாலாணை
நானென்ற ஆணுவத்தா லின் னூல்தன்னை
நாட்டில்விட்டா லுன்தேகம் நாசமாச்சே. (99

மருந்தீடு.

ஆச்சப்பா அந்தரங்கம் வெளியதாச்சு
அப்பனே கலைக்கோட்டான் தவசுமாச்சு
போச்சப்பா பொதுமாத ரிடத்திற்சென்று
போக்கிவிட்டா பதிவிரத தீர்க்கயோகம்
யேச்சப்பா வதனாலே வசையுண்டாச்சு
என்மகனே ஆனதினா லவர்கட்காக
மாச்சலப்பா யாதொன்று மில்லாமற்தான்
மைந்தனே மருந்தீடு வகைசொன்னோமே. (100

சொன்னதொரு வகைப்படிக்கு மதனபானம்
செய்துகொண்டு யீட்டுமுறை தன்னைச்சேர்த்து
மின்னனையார் பொதுமாத ரிடத்திற்சென்று
மீண்டுவரத் தனம்பறித்துச் சேதம்நாதம்
என்னவென் றுந்தனக்குச் சொல்லப்போறேன்
என்மகனே யறந்தழைக்கும் பவமொன்றில்லை
சனனமய மானதொரு கனகப்பூச்சி
சாற்றினேன் மரணாணை சத்திதானே. (101

சத்திசிவப் பூச்சி.

சத்திசிவந் தீங்குசென்ற பிணைச்சல்பூச்சி
சதாசிவமா மவையறிந்தோ ரெவர்நானப்பா
எத்திசையுந் திரிந்தாலு மிதுகிட்டாது
என்மகனே மும்மதத்தின் செயனீராலே
தத்திரமாய் ரிசிகெற்பம் போலவாச்சு
தன்னையறிந்தால் வாதமுறை கைகண்டாச்சு
மித்திரமாங் கருக்கிரணச் சத்துமார்க்கம்
மிச்சமப்பா மேற்போக்கு விபரங்கேளே. (102

கேளப்பா கடலைதன்னில் விளையும்பூச்சி
கேதுரா கென்றும்பேர் கிரணத்துள்ளே
பாளப்பா வானதொரு பதரைப்போக்கி
பார்த்திடவே சத்திசிவ மதிலுண்டாச்சு
கேளப்பா வேர்ப்பூச்சி யென்றுசொல்வார்
கூர்ந்துபார் கெருடாசுக மென்றவார்போல்
வாளப்பா மதனகா மியநெய்க்கிய
மைந்தனே முப்பூவின் வழலையாச்சே. (103)

ஆச்சப்பா முப்பூவின் வழலைதன்னை
அறியவென்றால் மும்மதத்தின் கடலைச்செயனீர்
காச்சப்பா சுடர்கிரண ரவியின்தீயில்
காய்ச்சுதற்குச் சத்துவகை பின்னேபாரு
மாச்சலப்பா ஒன்றுமில்லை மறைப்போயில்லை
மைந்தனே கற்பமுறை யுண்ணயிந்நூல்
சூச்சப்பா அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னோம்
சுருக்கறிந்த வாதமுறை தீங்குதானே (104)

தீங்குசென்ற வேர்ப்பூச்சி கடலைசற்று
தெரிந்தெடுத்து வெண்டிரை நீர்க் கீவாயாகில்
கங்குலது பூனைதனிற் பாய்ந்தாற்போல்
கடுங்காரச் சரக்குயிர்க ளெல்லாங்கொல்லும்
எங்குமிதை யறிந்தவரா ருலகத்தில்லை
இதையறிந்தார் போக்காக வெளியாய்ச்சொன்னார்
சொங்குபனி தாங்குகின்ற கடலைக்காயில்
சொர்ணமய மாய்ப்பூச்சி சுருண்டிரண்டாச்சே.(105)

இரண்டான பூச்சிதனை யறிந்தபேர்கள்
இரவியறிவார் வாதமுறை பிரட்டொன்றில்லை
உண்டான பூச்சியது ஆண்பெண்ணாச்சு
உத்தமனே சத்திசிவ மதுவுமாச்சு
கண்டார்க ளுலகமதி லெவர்தானப்பா
காரணத்தி லரன்மயத்தை யறிந்துபாரு
விண்டாரோ ரிசிமூலம் பதினெண்பேர்கள்
விண்டுவிட்டேன் கௌமதிநூல் விபரந்தானே. ()

தானென்ற ஆணுவத்தை விட்டுநீக்கி
தாரணியிற் கொடுவேலி யிலையைவாங்கி
நானென்ற கிருதமதின் தீங்குசுப்பு
நாடியே யணுவளவு கூட்டிச்சேர்த்து
நீனென்ற பவளம்வச்சிர மாவின்வெண்ணெய்
நீனிலத்தில் நவலோகந் தன்னிற்பூசி
மானென்ற மஞேமணியும் மரன்மேலாணை
மைந்தனே நாலெருவில் புடத்தைப்போடே. (107)

போடப்பா புடமதனை யாற்றிப்பாரு
பூனீர்போல் சாம்பல்தான் வெளுத்துநீரும்
சாட்டப்பா அணுவளவு முன்போல்நீயும்
சாடிவிடும் வியாதியது யெதுதானிற்கும்
ஆடப்பா யிந்தவித்தை ஆவின்வெண்ணை
அப்பனே அதைவிட்டால் கடைந்ததேனில்
நாடப்பா முன்போலே உமிழ்நீர்தொட்டு
நாடிவிடு வயித்தியசித் தாகிநீயே (108)

சித்தாதி யானவர்க ளின்னூல்தன்னை
செகந்தனிலே யொருவருக்கும் வெளிவிடார்கள்
எத்தாக உனைவணங்கி யேவலாளாய்
இருந்துபணி விடைசெய்வா ருண்மையாக
பத்தாசை யாய்நினைந்து யீய்ந்திடாதே
பரமசிவ ஞானியின்னூல் பகரொண்ணாது
கர்த்தாவின் சத்திலே மூளைத்தமூலங்
கருதினோ மீரைந்தோ ரெழுத்தின்வாறே. (109)

ஈரைந்தெழுத்து விபரம்.

ஈரைந்தெழுத்ததனைச் சேர்த்துப்பார்த்து
என்மகனே சிவன்வேம்பு குறண்டியாச்சு
ஆரறிந்தா ரிம்மறைப்பு ரவியின்போக்கு
அறிந்திருந்தும் பதினெண்பேர் மறைத்துப்போட்
வாரரிந்து இன்னூலில் வெளியதாக [டார்
மைந்தனே உந்தனுக்குச் சொல்லிப்போட்டேன்
கூரறிந்து உயிரெழுத்தை மூலிகையிற்தாக்கி
கொளுத்தியே யெரித்திடவே மூப்பூவாச்சே. (110)

ஆச்சப்பா பூப்பூவின் வழலையாச்சு
அப்பனே ரவிமறைத்தல் வெளியுமாச்சு
காச்சப்பா சிவமூப்பூ ரவியின்தீயில்
காய்ச்சியே யேழரைநா ழிகையிலப்பா
வாச்சுதப்பா வழலைமுப்பு ரவியினுப்பு
வாதமுறை தொட்டதொட்ட சித்துக்கெல்லாம்
சூச்சமப்பா முன்சொன்ன படிநீயியச்
சொல்லவொண்ணு தாச்சரியஞ் சொர்ணமாச்சே. ()

சொர்ணமய மானயின்னு லுலகத்தோர்க்குச்
சொல்லினு லுன்தேகஞ் சர்வநாசம்
வர்ணமணி பொற்சிவிகை யேறும்வேந்தர்
மானிடர்க ளிடத்தினிற்சென் றுலுமன்பாம்
நிர்ணயமா யெதுவேணு மீய்குவார்கள்
நீனிலத்தில் கடந்தவர்கள் கல்லுக்கொண்டு
கரணமய மாறிநீ கற்போல்வீசி
கடாவுவார் கைவளிநீர் பனியுப்பாலே. (112)

அறியாமூடர்.

பனியுப்புக் கொண்டுகரி யுப்புக்கட்டப்
பாரிலுள்ளோ ரறியாமல் பலநூல்பார்த்து
சனியுப்பு மூதேவி சூதத்துப்பு
தையல்மின்னுர் சுரோணிதத்தில் விளையவைத்து
இனியுப்புக் கண்டுகொண்டோ மெனவேயெண்ணி
யிரும்புகளுக் கீய்ந்திடுவான் பலனென்றில்லை
கனியுப்புக் கடலைதனில் விளையும்பூச்சி
கண்டவுடன் கௌமதிநூல் கைகண்டானே. (113)

கைகண்ட பெரியோர்க ளின்னுல்தன்னைக்
காட்டார்கள் நாமுனக்கு வெளியதாக
மெய்கண்ட திட்டாந்திர மகிமையெல்லாம்
மேதினியில் கௌமதியில் வெளியாய்ச் சொன்னேம்
பைகண்டோ ருலகிலறி யாமல்சற்றே
பதினெண்பே ரக்கினிப்பை யென்றுஞ்சொன்னுர்
மைகண்ட யிருளறுத்துத் துருசுநீத்த
மைந்தனே அக்கினிப்பை வகைசொன்னேமே. ()

கல்லுப்பு விபரம்.

சொன்னவகை யென்னசொல்வேன் துருசுநீத்த
சொல்லுமுறை யொருவருக்கும் வெளிவிடாதே
மன்னவர்கள ராஜாக்கள் முதலாயுள்ள
மாவேந்த ரருகிலுன்னை வணங்குவார்கள்
இன்னபடி யென்றுபய னுரைத்திடாதே
என்மகனே யில்லறத்தை வெறுத்தபேர்க்கு
சன்னமய மானதிங்கு கருவின்பூச்சி
சாற்றுகிறேன் கல்லுப்புப் பனியினுப்பே. (115)

பனியுப்பை நாதாக்கள் பதினெண்பேர்கள்
பாடினர் வழலையுப்பு முப்பூவென்று
தனியுப்பைக் கரியுப்பு உவருப்பென்று
தாரணியில் முன்னூலைப் பார்த்தபேர்கள்
கனியுப்பைச் சூதத்தின் தீண்டாவுப்பை
கடுஞ்சரக்கில் கொடுத்தூதி யேங்கியேங்கி
இனியுப்பைத் தேடியின்ன மலைவார்கோடி
என்மகனே கொடிவேலி யிலையைக்கேளே. (116)

கொடிவேலி கிரந்திநா யகருதன்னை
கொண்டுவந்து எண்ணெய்நெய் களிரண்டுஞ்சேர்த்து
யிடுவாயே யாமாகில் வெவ்வேறாக
யென்மகனே பிரித்துவிடு மின்னங்கேளு
படுபாவி யென்றுரைப்பா ரிலந்தைபோல
பார்தனிலே முளைத்திருக்கும் பசும்பாலில்
நடுவாக யிதுபிழிந்து யெருமைப்பாலில்
நாடிவிடு வெவ்வேறாய்ப் பிரிக்கும்பாரே. (117

காட்டுவிளா முறை.

பாரப்பா அப்படியே அந்தமிலைமார்க்கம்
பார்தனிலே முளைத்திருக்குந் தூண்டிமுள்ளாம்
நேரப்பா பெருமரம்போல் நிலையாய்நிற்கும்
நீயறிந்தால் நீத்துமுறை கைகொண்டாச்சு
ஆரப்பா யறிந்தவர்க ளின்னங்கேளு
அப்பனே விளாமரமா முலகத்தோர்க்கு
வீரப்பா கொடியதொரு நீத்துக்கெல்லாம்
வீரடக்கும் படிபிரமன் விதித்தார்காணே. (118

காணப்பா காட்டுவிளா தன்னை நீயும்
கண்டபின்பு நீற்றுமுறை கைகண்டாச்சு
வீணப்பா பலநூலும் பார்க்கவேண்டாம்
விரும்பியே சித்திசிவ மிருவர்தாமும்
நாணப்பா யிருவருமே நடனமாடி
நகைத்துமணஞ் சலித்தொருவர் மாத்தில்வந்து
ஆணப்பா அவரிருந்தார் அதனால் சற்று
அகற்றிவைத் தாரெனவே யறிந்துகொள்ளே (119)

அறிந்துகொள்ள இன்னமொரு வகைதான்சொல்வோம்
அப்பனே முப்பூவின் வழலையுப்பு
முறிந்துதப்பா சத்துயிர்க ளெல்லாஞ்சேர்த்து
முடிந்ததப்பா நாலெருவில் சாம்பலாக
எறிந்துவிடு பலநூலுங் கைக்கொள்ளாதே
என்மகனே கிரந்திநா யகரின் போக்கு
பிரிந்துதப்பா வெப்பெண்ணெய் நறுநெய்வேறாய்
பெலமறிந்து லோகமெல்லாம் நீத்திப்பாரே. (120)

நீத்துமுறைக் கிதுவிட்டால் வேறொன்றில்லை
நீனிலத்தி லறிந்தவர்பா ருலகில்லை
கூத்துவனும் நீத்தினத்து விரோதியான
கொடியதொரு விளாவிலேயி லரியால்வெள்ளை
சேத்துநீ யரைத்ததிலே புகைபோகாமல்
சொர்ணமுத லிரும்புவரை சேரப்பூசி
காத்ததுவை யனுசரிக்கப் புடத்தைப்போடக்
காரணத்தை என்னசொல்வேன் கடிகைப்போதே()

கடிகையொரு நொடிநேரந் தன்னிற்பாரு
கருதியதோர் நீற்றுமுறை தன்னைச்சேரு
பிடிகையப்பா தாம்பூரச் சிமிழிற்சேரு
பூனீரில் தும்பைமலர் தோற்றுப்போகும்
துடிகையிது நீத்தினத்துக் கவதானத்தில்
சொன்னபடி முறைக்கெல்லாந் தீங்குசேரு
அடிகையிந்தப் படிவழலை சேர்த்துக்கொண்டு
அப்பனே திங்குசிங்கம் வங்கம்பாரே. (122)

சிங்கமது குலத்திலுயிர் யெதுதானிற்கும்
சிவகிருபை யறியும்வழி யடிக்கிப்போடு
புங்கநெய்யி லழியான பண்ணிமுள்ளைப்
புகட்டியே சேர்த்தரைத்து வேகவைத்து
அங்கமுள்ள செவியவியக் கருச்செய்தாலும்
அப்பனே அதையறிந்து செவியிலூட்டு
பொங்கமதாய்ச் செவிதிறந்து அறிவுண்டாச்சு
பூவுலகிற் கபடநா டகத்தைக்கேளே. (123)

கேளப்பா தீங்குசுப்பு முடிப்பாயாகில்
கெருவமெல்லாம் விட்டுவிட்டு உலகத்தோர்கள்
ஆளப்பா யேவலா லடுமைப்பாங்காய்
அனுசரித்துக் கௌமதிநூ லடக்கிப்போடு
ஊளப்பா பிறவிகூண் சாபம்நீக்க
உற்றதொரு தேரையென்ற தயிலத்தாலே
கோளப்பா செய்ததொரு கபடமோசங்
கூடாது கொல்லுமுறை இரும்புக்கூறே. (124)

அறியாமாந்தர்

இரும்புகருஞ் சூரையென அறியாமாந்தர்
இவ்வுலகில் கோடான கோடிபேர்கள்
விரும்பியே வாதமுறை செய்வோமென்று
வீணாகி வீணர்விந்து நாதந்தன்னை
அரும்பொருளா மென்றுமின்னூர் சுரோணிதத்தை
யாமெனவே ரவியில்வைப்பா னறிவுகெட்டான்
கரும்புரசங் காமப்பால் கண்டானாகில்
கைகண்டான் வாதவித்தை மெய்கண்டானே. (125)

மெய்கண்ட தின்னமொரு வகையைக்கேளு
மேதினியில் ரசவாதஞ் செய்வோமென்று
மைகண்ட திருடரைப்போல் பதினெண்பேர்கள்
மருவியே பாடினதோர் பலநூல்பார்த்து
மெய்கண்ட தென்றுசிலர் தூமநாத
மென்றுவரு வாரதனால் பலன்தானேது
சைகண்ட தொன்றுமில்லை யப்புநாதம்
சார்ந்துபார்த் தேவழலை மூப்பூவீயே. (126)

வழலை.

ஈயப்பா முப்பூவின் வழலைமார்க்கம்
என்மகனே வெண்டிரை நீர் கடலைச்செயனீர்
சாயப்பா கஞ்சுகத்தின் சீலைபோட்டு
சலவையிட்ட பீங்கானில் வைத்துக்கொண்டு
ஆயப்பா செயனீர்முன் னிலையிற்சற்றே
அதையறிந்து புகைத்தெரிந்து யெடுத்துப்போட்டு
காயப்பா ரவியில்வைத்து யீரைந்தோர் நாள்
கண்டுபார் மணிமணியாய் விளைவுண்டாமே. (127)

ஆமப்பா அந்தவுப்பு செம்புக்கீய
அப்பனே சரிகைவெள்ளி யதுபோதாது
நாமப்பா அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னோம்
நாதாக்க ளொருவருபப் படிச்சொல்லார்கள்
காமப்பால் மதனப்பால் மூப்பூவென்று
கண்டுகொள்ள அறியாதான் பலநூல்பார்த்து
தூமப்பால் வழலையென்று சொல்வாரய்யோ
தூதா நீ பனியுப்புச் சூட்சம்பாரே. (128)

பாரப்பா யின்னூல்போ லொருநூலில்லை
பரமனெனும் அரன்பேரில் தீராதாணை
நேரப்பா நினைந்துகொண்டு யின்னூல்தன்னை
நீனிலத்தி லொருவருக்கு மீயொண்ணாது
ஆரப்பா யெவரேனு மறிவாயுள்ளோர்
அறிந்தெடுத்து வருஷமுதல் பனிரெண்டாகில்
சாரப்பா அவனுடனே தேகமொன்றாய்
சார்ந்திடினுங் கௌமதிநூ லீயொண்ணாதே. (129)

ஈயவொண்ணா தின்னூலை யீவாயாகில்
என்மகனே சென்னீரின் கிணற்றின்மேற்கே
தாயகமாய்க் கல்லதுபோ லருள்கானென்று
சாற்றினே மப்படியே மூன்போல்நீயும்
நேயமதா யுற்றவர்கட் கீய்ந்தாயாகில்
நீனிலத்தி லப்படியே மாய்கையற்று
பேய்நிறம்போல் நோயுருவாய் மரமாய்நின்று
பேசரியாப் பாய்மரமாய் நிலைநிற்பாயே. (130)

நிலைநிற்கும் படியிதை நீ யுண்மையாக
நிட்சயித்துக் கௌமதி நூல் பதலைப்பண்ணு
சிலையெய்க்கும் விழிமடவா ராசையாலே
சிந்தையற்று நிந்தைபெற யீவாயாகில்
வலைமேய்க்கும் மாமரலி சிட்சையாலே
வருத்தம்போல் நரலோகந் தன்னில் நீயும்
பலைமெய்க்கும் பொதுமாத ரிடத்திற்சிக்கி
பரதவிப்பா யென்று மூன்னூல் மொழிந்திட்டோமே

மொழிந்திட்ட மாயிந்நூல் வணங்கிக்கேட்கும்
முழுமோச நிர்மூடர்க் கீயொண்ணாது
கழிந்திட்ட மாயரசர்க் கீய்ந்தாயாகில்
காரிகையாம் பொதுமாத ரிடத்திற்சிக்கி
கொழிந்திட்ட மாகவுமே நேசமாகி
குடிகெடுக்க முன்னிட்டுக் குருவைச்சேரு
நளிந்திட்ட மானபொருள் நாசமாக
நாட்டியமுன் வழலைமுறை நயமுற்றேனே. (132)

கரியுப்புப் பற்பம்.

நயமுற்று யின்னமொன்று சொல்லக்கேளு
நாடுதனில் கரியுப்பில் கடுக்காய்ச்செயநீர்
மயமுற்று அணுவளவு வழலைகூட்டி
மைந்தனே அரைத்தெடுத்துப் புடத்தைப்போடு
வியமுற்றுப் பூனீர்போல் பற்பமாகும்
வெண்மையென்ன முசுட்டைமலர்க் கதிகமாச்சு
பயமற்று வங்கமதிற் கொடுத்துப்பாரு
பரமவெளி கண்டுதப்பா வயதீரெட்டே. (133)

எட்டாதே யொருவருக்கு மின்னூலப்பா
எனைப்போலே போகனொரு நூலுஞ்சொன்னான்
முட்டாதே பலநூலும் பார்த்துப்பார்த்து
முறையறிய மாட்டாமல் மோசம்போகி
கிட்டாதே கருமறைத்தல் பதினெண்பேர்கள்
கிரணமெலாம் நூல்தோறு மறைத்துப்போட்டார்
திட்டாதே சாஸ்திரத்தை பொய்யேயென்று
சிவகிருபை செந்தூர வகைதான்கேளே. (134)

உப்பு சேர்தூரம்.

கேளப்பா முன்முடித்த பற்பந்தன்னை
கெருவமதை மனமடக்கி வெளிவிடாமல்
ஆளப்பா அடக்கமதாய் வைத்துக்கொண்டு
அப்பனே அணுவளவுப்போர் பலத்துக்கொன்று
நீளப்பா முன்சொன்ன கிஷாயம்விட்டு
நேராக யிருநாற்றுக் கொன்றுகூட்டி
யாளப்பா பத்தெருவிற் புடத்தைப்போடு
மைந்தனே முருக்கமலர் போலவாமே. (135)

ஆமப்பா வெள்ளிதனக் கீய்ந்தாயாகில்
அப்பனே பத்தரைமாத் ததிகங்காணும்
சரமப்பா அனல்காணுச் சரக்குக்கெல்லாம்
சற்குருவாஞ் செந்தூர முப்பூதன்னை
நாமப்பா உரைத்துவிட்டோ மிருநூற்றுக்கு
நாடியதோ ரொன்றுமுறை தவறிடாமல்
காமப்பா லுப்புமுறை வழலைநாதங்
கட்டியசெந் தூரமிது கனகமாமே. (136)

ஆமென்று நாமுறைத்தோம் போகநாதன்
அறிந்திருந்தும் ரிசிமூலம் மறைத்துப்போட்டான்;
நாமின்று வெளியுரைத்தோங் கடலைப்பூச்சி
நாதாக்கள் பதினெண்பேர் நூல்கள்தோறும்
வேமென்று வேறெனவே மறைத்தார்பாவி
விந்துசிவ தம்பனத்துக் காகுஞ்சித்து
தாமென்று கல்வியடஞ் செய்தபேர்க்கு
தகைப்பேது சிவமேது தகைத்திடாதே. (137)

தகைத்திட்ட தின்னமொரு வகைதான்கேளு
தாரணியில் மன்மதவேள் கிராணிமூலம்
திகைத்திட்ட கதிரவனு மிதனாலப்பா
திறம்பார்த்தார் போர்பொருது செயித்தாரில்லை
வகைத்திட்ட மன்மதவேள் மூலவேரை
வாங்கிவர அறியார்கள் வசமற்றோர்கள்
பகைத்திட்ட பேர்களிட மரையிற்கட்டி
பகலிரவு மல்போரு பார்த்திடாயே. (138)

பார்த்திட.வே மனமாய்கை ஆசையுற்று
பார்தனிலே உள்ளவர்கள் பலநூல்பார்த்து
சேர்த்திடவே குளிகைதம் பனத்துக்கென்று
சீரழிந்தா ரருள்கெட்டார் தூமச்சத்தில்
கோர்த்திடவே குளிசமொன்று அரையிற்கட்டி
கொண்டமட்டுங் செய்தார்கள் குணமொன்றில்லை
வேர்த்திடவே யரியார்கள் வேறென்றெண்ணி
விளம்பினுர் பதினெண்பேர் விபரந்தானே. (139)

விந்துதம்பனம்.

விபரந்தா னென்னசொல்வேன் கல்விப்பூச்சி
விடையமதை யறிந்தவர்க ளுலகத்தில்லை
கபரந்தான் சூட்சமயங் கடலைச்சோங்கு
காய்தனிலே துவாரவழி ரெண்டுண்டாகும்
துபரந்தா னதையெடுத்து விடுத்தாயாகில்
துடங்கியதோர் முறைக்கிதுவே துறவுகோலாம்
உவரந்தா னெனில்வழலை மதனப்பால்நீர்
உரைவதற்குப் பதர்தள்ளி மாலாஞ்சேரே. (140)

சேரப்பா கல்வியென்ற பூச்சிசேர்த்து
செகந்தனிலே வழலையுப்பு மூப்பூஉப்பின்
கூறப்பா காட்டெருதா னிறையக்கொட்டி
குடந்தனிலே வசம்பரைத்த மாவைச்சேர்த்து
பாரப்பா குழிதனிலே போட்டுப்பாரு
பராபரத்தின் மகிழ்ச்சிபெறச் சமரதாச்சு
தீரப்பா மண்மூடிப் புகைபோக்காமல்
தீர்ந்தபின்பு மறுநாள்போய்த் திறந்துபாரே. (141)

திறந்துபார் சூடன்முறை யிதைப்போலில்லை
திறமறிவார் லோகமதி லொருவரில்லை
பிறந்துதப்பா நீங்குசென்ற பூச்சியாலே
பிறக்காத வஸ்துவெல்லாம் பிறக்கலாச்சு
இறந்துபோச் சிப்படியே சரக்குயிர்களெல்லாம்
இயம்பினேன் சூடன்முறைக் கிணையொன்றில்லை
அறந்துதிக்கும் வாதமிதுக் கெதுநேரப்பா
அப்பனே சிவாலயத்துக் களித்திடாயே. (142)

# போகர் கற்பம் 300.

இதில் அமுரி கற்பம் சாப்பிடும் விதமும், அதை எந்தவிதத்தில் மூரித்துச் சாப்பிடுகிறது என்பதும், அதை எப்படி உபயோகிப்ப தென்பதும் கற்பம் சாப்பிடுங் காலத்தில் ஏற்படக்கூடிய சூடு சோப தாபங்களுக்கு வேண்டிய சிஷாயங்களும் அதுசமயம் ஸ்நானம் செய்யும் முறையும், கற்பம் சாப்பிடும் போது புளி உப்பு பெண்போகம் கூடாதென்பதின் காரணமும், அக்குற்றங்க ளேற்பட்டால் அதற்கான சிகிச்சை செய்துகொள்ள வேண்டிய வகையும், கற்ப மூலிகை விபரங்களும், கருந்துளசி கருநெல்லி கருநொச்சி இவைகளை நாமே பயிர் பண்ணிக் கொள்ளவேண்டிய முறையும், வாத முறைகளுக்குத் தைல வகைகளும், சுத்தி முறைகளும், சிதம்பரத்தில் தங்க விக்கிரகஞ் செய்த விபரமும், சொல்லியுள்ள புதிய சாஸ்திரம்.

புத்தகம் 1 க்கு விலை அணா 0—10—0

# அகத்தியர் ஐந்து சாஸ்திரங்கள்.

**மணக்கோலம் 200, கணக மணி 100, வைத்தியக் கோவை 125, வைத்தியத் திரட்டு 81, கிருக்கு நூல் என்னும் கிரிகை 18 க்கும், குணமும்' நிவர்த்தி செய்யும் மருந்து பாகங்களும், அடங்கியது. ஆ 5 சாஸ்திரங்கள்.)**

இதில் வயித்திய பாகங்கள் பாஷாணங்களில்லாது கடைச்சரக்குகளைக்கொண்டு எளிய முறையாகச் செய்து கொடுத்து சகல நோய்களையும், தீர்க்கு வண்ணம், கைபாகஞ் செய்பாகம், முறையோடு சொல்லி யிருப்பதோடு, மானிடர்க்கு, வாத பித்த சிலேற்பனத்தால் ஏற்படும், 18 விதமான கிறுக்குகளின் குணமும், அதை நிவர்த்திக்க மூலிகை களினால் மருந்தும், கலிக்க வகைகளும், நசிய வகை களும், துவாலை வகைகளும், தெளிவாய்க் கூறியுள்ள அரிய பெரிய சாஸ்திரம் இப்புத்தகம் ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டிய தவசியம் அவரவர்களே மருந்துகள் செய்து கொடுத்து வியாதியை குணப்படுத்திக் கொள்ளும் முறைகளாய் அடங்கியுள்ள சாஸ்திரம்.

புத்தகம் 1-க்கு விலை அணா 0--12—0

அளித்திடுவா யருள்நிறைந்த தீக்கவாசம்
அப்பனே சூடனதின் குணத்திநேரம்
ஒளித்திடுவா ரனுப்பானக் கூட்டுச்சேர்ப்பார்
ஓகோகோ நிர்மூடர் பாவிப்போர்கள்
களித்திடுவாய் பச்சரிசி மாவைச்சேர்ப்பார்
கண்டறியார் கற்பூர வாசந்தன்னை
பளித்திடுவார் ரேதோதீய்ப் பிடியாயோசம்
பயனறியான் மயந்தெரியான் மாட்டேனென்பான்

வெள்ளி

பானென்ற மதுபானந் தன்னிலேதான்
பாதாள மூலிகையைப் போடுபோடு
சூனென்ற லகிரிவிட்டுப் பாலதாச்சு
சுத்தவெள்ளைப் பாஷாணந் தன்னிலேதான்
மானென்ற நாயகற்றி செயநீர்விட்டு
மைந்தனே தீங்குசென்ற பூச்சிபோடு
நானென்ற அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னேன்
நலமான கயிலைவெள்ளி கட்டலாச்சே. (144)

கைலைவெள்ளி மலைமலையாய்க் கட்டலாம்நீ
கண்டுகொண்டால் வங்கமதி லுமிழ்நீர்தொட்டு
தயிலமது போலுருக்கிக் கொண்டுநீயுந்
தாக்குவா யூசிமுனை தொட்டுநீட்டு
சயிலமென்றார் மச்சமுனி கூறும்வாதஞ்
சாட்சியென்ன சற்றுருவா மப்புநாதம்
வெயிலமே யென்னசொல்வே னீயஞ்செம்பு
விரும்பினேன் சரிகைவெள்ளி விபரந்தானே (145)

விவரந்தா னென்னசொல்வே னின்னூல்தன்னில்
விடையமிட்ட கருக்கிடையை விருப்பிநீயும்
கவரமுற்று ஒன்றூடே ஒன்றுதள்ளி
கருதியே தெளிந்துபார் வெளியாய்த்தோன்றும்
துவரமப்பா முன்ஜெனனம் மாதிக்காயந்
துருவாசற் கிரந்திரா சாளியான
உவரமற்ற கடுக்காயின் கிஷாயப்போக்கு
உத்தமனே கற்பாதிக் காதிகேளே. (146)

கடுக்காய் கிஷாயம்.

ஆதிக்காய் முதற்கற்பங் கடுக்காய்தன்னை
அப்பனே பலம்பத்து மிடித்துநீயும்
சோதித்து பாற்கூட்டி விரையைப்போக்கி
சூரணித்து ஒருஅணி நீரிற்போடு
வாதிக்கு யிந்தமுறை கைக்கிட்டாது
வழியறிந்து நெருப்பெரித்துப் படியொன்றுக்கி
நீதிக்கும் பானையதில் புகைபோகாமல்
நீயறிந்து தயிலமதை வடித்துக்கொள்ளே. (147

வடித்ததொரு தயிலத்தின் வகைதான்கேள்மூன்
வகையறிந்து கரியுப்பில் கொடுத்துக்கொண்டு
கடித்தமதா யரைத்திடவே வழலையுப்பில்
கடுகுநேரவ்வளவு யெடுத்துக்கூட்டு
தொடுத்தவுட னுதிரமயம் போலுண்டாகும்
தூசணிப்பார் கண்டவர்கள் திடுக்குண்டாகும்
யெடுத்ததனை வில்லைசெய்து கவசம்பூசி
என்மகனே ரவியில்வைத்து புடத்தைப்போடு(148

புடம்போடு மூருக்கமலர் போலதாகும்
பூவுலகி லிதையறிந்தா ரெவர்தானப்பா
அடம்பெரிதா யொருவருடன் வீண்பேசாதே
அப்பனே யின்னூலை வெளிவிடாதே
இடம்பெரிதாய் நவலோக முருக்கிமீய
என்மகனே கனகம்வய தீரைந்தாகும்
விடம்பெரிதா மென்றுநினை யின்னூல்மார்க்கம்
விதியறிந்து மதிதெரிந்து விரும்பிப்பாரே. (149)

பாரப்பா நான்சொன்ன முறைதப்பாமல்
பார்தனிலே யிந்நூலை வெளிவிடாதே
நேரப்பா யிதற்கிணைதான் ஒருநூலில்லை
நீற்றுமுறை யந்தரங்க மறைப்பொன்றில்லை
தீரப்பா நோய்மிடியோர்க் கின்னூல்தன்னில்
திருசான அக்கினிப்பை குணத்தின்போக்கு
நீரப்பா வகமறிந்தோ ராருமில்லை
நீனிலத்தில் நவலோகம் நீற்றுவாயே. (150)

நவலோகம் ஒன்பதுமே சாம்பலாக
நலமான அக்கினிப்பை துருசின்மார்க்கம்
சிவமயமா மருகுறுணி வழலைமுப்பூ
சித்தறிந்து காியுப்புக் கீவாயாகில்
உவமான மென்னசொல்வேன் தெளிவுண்டாக்கி
உலகமதில் வாதமெல்லாங் கைகண்டாச்சு
தவமேறுங் கண்ணுடிக் கருவுண்டாச்சு
தனதுருப்போ லினமினமாய்க் கருவுண்டாச்சே. ()

ஆச்சப்பா மறைப்புகளை வெளியாய்ச்சொன்னேன்
அப்பனே எனைப்போலே யாருஞ்சொல்லார்
மாச்சலப்பா பலநூலும் பார்த்தாயாகில்
மைந்தனே போக்காக நாதந்தானும்
சூச்சப்பா அகமதுபோ லொருநூல்சொன்னார்
சூடரிமா லாகாசச் செயநீர்தன்னை
பூச்சப்பா செம்புமுதல் செயனீர் நீற்றல்
பிரசபிக்க மூப்பூவை யரிமால்கியே. (152)

ஈயப்பா குருவழலை தன்னைவாங்கி
என்மகனே கயிலாசச் செயநீர்தொட்டு
பாயப்பா ஊசிமுனை கொண்டுநீயும்
பாக்கிலைக்குச் சேருவுரு மயம்போலாச்சு
நாயப்பா நாய்போலே கற்றோர்கிட்ட
நலமுற்றுச் சண்ணிட்டுத் திரிவாயாகில்
பேயப்பா வகம்நீயே யல்லால்வேறு
பித்தரில்லை நவலோகம் நீற்றக்கேளே. (153)

நவலோக நீற்றினத்தை யறிவாயாகில்
நாட்டியதோர் வயித்தியசித் தாதியாரு
சிவலோக முறைபார்க்கில் கெவுனமார்க்கம்
சித்தறிந்தால் மரலியதி காரமேது
தவயோகம் பெற்றவருக் கின்னூல்கிட்டில்
தனித்தனியே அக்கினிப்பை முறையேகிட்டும்
பவலோகம் பெற்றதொரு யிரும்புநீற்றும்
பதுமரா சாளிதிங்கள் மதிச்சார்கேளே. (154)

கனகவித்தை

திங்கள்மதிச் சாறுவிட்டுக் கடுக்காய்தன்னை
திருதிருத்து அரைத்ததைநீ குகைதான்செய்து
வங்கநீர் உப்பதனைக் கவசம்பூசி
வடிவுபெற ரவியில்வைத்து எடுத்துக்கொண்டு
பொங்கமுட னேர்சீலை மண்தான்செய்து
புகலாதே பத்தெருவிற் புடத்தைப்போடு
தங்கமயங் காண்பதற்குக் கனகவித்தை
தாய்போலே கௌமதிநூல் சாற்றினேமே. (155)

சாற்றினேந் திங்கள்மதிச் சார்தானந்தச்
சாஸ்திரத்தி லெவருரைத்தா ராருங்காணார்
மாத்ததுதா னீரைந்தோ ரரையுங்காணும்
மைந்தனே சிருசின்னி திங்கள்மதியாகும்
சூஸ்திரமாய்ச் சொல்லிவிட்டோம் வந்தபேர்க்கு
சுவர்கட்டிப் பெலன்கட்டுங் கடுக்காய்மார்க்கம்
கோத்திரத்தை யறிந்தவனே கிரணவித்தை
கொண்டுமுடிப் பானெனவே கூறலாமே. (156)

செந்தூரம்

கூறுவோஞ் சிருசின்னி யிலையின்சாறு
கொடுப்பதற்கு உமுரிச்சார் விட்டுஆட்டு
பேருபெற முன்சொன்ன படிதப்பாமல்
பொதிந்துநீ ரவியில்வைத்துப் புடத்தைப்போடு
சீருபெறக் கடுக்காயின் பரிட்சைபார்க்கச்
சீனியுப்பில் தனிக்கடுக்கா யறைத்துப்பூசு
வேருமய மாய்ப்போகுந் தித்திப்பாகும்
வேதைவித்தை வாதமுறை செந்தூரமாமே. (157)

செந்தூர மகுத்துவத்தைச் சொல்லக்கேளு
செம்புமுத லிரும்புநவ லோகமெல்லாம்
வெந்தூரும் போததிலே வழலைசேர்த்து
வேதையிட்ட செந்தூரந் தன்னை நீயும்
கந்தூர மானகயி லாசச்செயனீர்
கருதியே அணுமுனையிற் தொட்டுநீட்டு
சிந்தூருங் கேதாரச் சலத்திலுள்ள
சிருமணல்போல் சூரியத்தின் கிரணமாச்சே (158)

திலதம்

சூரியன்தன் கிரணவொளி போலின்னூலே
சூச்சமிட்டுப் பார்க்கில்மயந் தோற்றுமப்பா
காரியந்தா னறிந்தவர்க ளுலகிலில்லை
கண்டுகொண்டா லுனக்குநிகர் பெரியோரில்லை
பாரிசா தகமலரைத் தெரிந்தாயானால்
பரித்துவந்து ரவியில்வைக்கக் கதியுண்டாகும்
சீரியதோர் மிருகமுதல் ஸ்திரீகள்வேந்தர்
சீஷமுற மதிரவியி னீரிற்சேரே. (159)

சேர்த்தப்பா வதனமதிற் திலதம்போட்டு
சேகரமாய் நீயும்வந்து நின்றாயானால்
பார்த்தப்பா நேர்நிலைதில் லுனைக்கண்டோர்கள்
பகையாளி யாகிடினும் மனம்வேறாக
வேர்த்தப்பா உடம்புமிக நடுங்கிப்பின்னும்
விதிமறந்து தகைபிறந்து திகைப்பார்பாரு
மாத்தப்பா கைலாசச் செய நீர்தொட்டு
மைந்தனே அவர்பிரிவார் மகிழ்ந்துபாரே. (160)

பாரப்பா என்னசொல்வேன் திலதப்போக்கு
பாரிலுள்ள மானிடர்கள் நீதிமார்க்கம்
வேரப்பா பிரிந்துபோச் சதனால்நீயும்
விரும்பியே யிடமறிந்து திலதந்திட்டு
சேரப்பா தவசியர்கள் விரதமார்க்கம்
சித்தளிக்கும் பித்தருக்கும் பகையாளிக்கும்
வீரப்பா யிப்படிநீ திலதந்திட்டி
விரும்பியே தன்மனம்போல் வேண்டுவாயே. (161)

வேண்டுவா யிப்படிநீ செய்தாயானால்
விருப்பியுனை நாடாது பாவதோஷம்
பூண்டுமே நீதிமுறை தவறிடாமல்
பூதலத்தில் மௌனமா யிருந்துகொண்டு
ஆண்டுமே யின்னூலை வெளிவிடாதே
அப்பனே அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னேன்
தோண்டுவாய் புதைபெற்று அடக்கமாகத்
தேடிவந்த பொருள்களெல்லாஞ் சிலவிடாயே. (162)

ஈயப்பா அயவீர பூரஞ்சாரம்
இளகியதோர் நிமிளைவெண் காரங்கெந்தம்
தாயப்பா கடுங்கார மஞ்ஞேசிலையும் லிங்கம்
தனியொன்றுக் கோர்களஞ்சி நிருத்துச்சேர்த்து
மாயப்பா மேதைச்சார் பழச்சார்விட்டு
மைந்தனே கரியுப்புக் களஞ்சிநாலு
தேயப்பா வடிவுபெற அரைத்துக்கொண்டு
தேர்ந்துகலை யுணர்ந்துகுக் குடத்திற்போடே.(163)

போடென்ற பாகமுறை பற்பந்தன்னைப்
பேரண்ட வேப்பெண்ணெய் தன்னில்நீயும்
கூடென்ற முறைவிதியைச் சொல்லக்கேளு
குன்மமூதற் பெருப்பாடு துவாலைசேர
சூடென்ன பழந்தின்னிச் சாரெண்ணெய்க்குள்
சூட்சித்தோ ரதினிடைதான் கிராசிலாடி
பாடென்ற சுலோபமுற்ற வியாதியோர்க்குப்
பார்தனிலே யிந்தமுறை தவறுதீயே. (164)

ஈயப்பா என்னசொல்வேன் தேகந்தன்னில்
இருந்ததொரு வியாதியெல்லா மெங்கேபோச்சு
தாயப்பா யிந்தமுறை வயித்தியோர்க்கு
தந்தையென்றும் முப்பூவின் வழலையென்றும்
சீயப்பா பலநூலும் வெளியேபோட்டு
சீரறிந்து வழிதெரிந்து தீங்குசேறு
ஆயப்பா கண்டகோ டாலியாச்சு
அறிவறிந்து ரசம்புளியை நீக்கிப்போடே. (165)

போடப்பா யின்னமொரு வகைதான்கேளு
பூமிநா தத்துவஸ்து பன்னீர்விட்டு
கூடப்பா தீங்குசென்று ராகுகேது
கூட்டியே சேர்த்தரைத்துப் புடத்திற்போடு
ஈடப்பா வாதமுறைக் கிதுவேயீடு
என்மகனே இல்லாட்டால் கேடுகேடு
ஆடப்பா யிப்படி நீ யெட்டோடெட்டு
ஆடியதோர் ரிசிமூலந் தொட்டுத்தட்டே, (166)

தட்டப்பா லோகஅதி சயமாயுள்ள
 தாரணியி லடங்கியதோர் வஸ்துமூலம்
கட்டப்பா ரிசிகெற்ப மதனுலந்தக்
 கடியதொரு சரக்குவகைக் கிதுநீதொட்டு
வெட்டப்பா கண்டகோ டாலிராகு
 விடையமுற்றோர் பூச்சிபூச் சியென்பார்கள்
சட்டப்பா என்னசொல்வேன் சரக்குநீற்றல்
 சத்துயிரைக் கொள்ளுமனு போகங்கேளே. (167)

அனுபோகந் தன்னிலசை யாதமார்க்கம்
 அப்பனே மதனப்பால் வழலைதீர்க்கம்
தனுவாகுங் கடலையுட மதனச்செயனீர்
 தனையறிந்தால் முப்பூவு நாதமாச்சு
மனுவான பேர்கள்பல நூலைப்பார்த்து
 மயமரியார் கோடான கோடிபேர்கள்
சனுவான அகத்தியனும் வெளியாய்ச்சொன்னேன்
 சார்ந்துபார் சிவகிருபை வழிதான்தோணும் (168)

தோணுமப்பா சிவயோக மிதுக்குள்ளாச்சு
 தொட்டதொட்ட சித்துமயங் கைகண்டாச்சு
காணுமப்பா கற்பமுறை மெய்விட்டாச்சு
 கருதாதே பிரமலபி விட்டுப்போச்சு
ஆணுவமாய் வாய்திறந்தால் கர்மந்தேடு
 அப்பனே ஆராலே பொருக்கக்கூடும்
தூணுவமாங் கற்சிலையைப் பெண்ணதாக
 தூதுசென்று கொங்கணவர் விடுத்தார்காணே. (169)

விடுத்தார்கள் கொண்டுசென்று குருவின்முன்னே
 விரும்பியே மனமாகிக் பார்க்கும்போது
கடுத்தாரே மருவசன முறைபேச்சில்லை
 கல்பெண்ணு மென்றிதையு மறியமாட்டார்
தொடுத்தாரே கலைக்கியானம் போகநாதன்
 தோகைமயில் சாய்கையல்லா லீகையேதென்
றெடுத்தாரே தற்சொரூப ஞானபோத
 மெடுத்துரைத்த உபதேச மியம்பக்கேளே. (170)

கேளப்பா கொங்கணவர் சொன்னமார்க்கம்
கோவில்தனிற் சென்றாமே தன்னைத்தேடி
மீளப்பா வென்றுசொன்னீர் இருவர்நாங்கள்
மீளவென்றால் விதிமார்க்கம் அங்கொன்றில்லை
நாளப்பா செய்முகூர்த்தம் விதியாலிந்த
நற்கன்னிப் பதுமைதனை யழைத்துவந்தோம்
ஆளப்பா வெங்களையுங் கிருபைசேர
அயன்விதியை யிருவர்தமக் கறிவிப்பீரே. (171)

அரியவென்றா லென்மக்காள் மதனச்செயனீர்
அறிந்தவரா நுலகமதில் காமப்பால் நீர்
தெரியவென்றால் கேதாரக் காட்டில்பாரு
தேகசித்தி யோகசித்தி ஞானமார்க்கம்
பிரியவென்றாற் கல்விமயம் பேச்சொன்றில்லை
பிரித்துவந்த கல்பதுமை பெருத்ததூணை
எரியவென்றால் சோதனையே செய்தோமப்பா
எய்துமே வீரடக்க யிய்கைபாலீர். (172)

பாலிப்பா யுங்களுட சித்துமார்க்கம்
பதுமைதனைக் கல்பெண்ணைக் கொணர்ந்ததீர்க்கம்
கேலிப்பா யென்னசெய்தீர் கொங்கணரே நீர்தான்
கெருவவிதி யடக்காத இடைக்காட்டார்போல்
நீலிப்பாய் கொண்டுவந்து விட்டஞாயம்
நினைவிரவி யுண்டுபண்ண அரிந்தீரில்லை
ஆலிப்பா யாகிருஷ்ண வித்தைதன்னால்
அழைத்துவந்த வாரெனக்கு அறிவிப்பீரே. (173)

அறிவிப்பீர் கொங்கணரே கருவூராரே
ஆதியந்த முதலான வகையைநீரும்
பிரிவிப்பீர் கற்சிலையின் வரலாற்ஞாயம்
பிரித்துமதன் ரதியவள்சக் களையாக
சரிவிப்பீர் கேதாரக் காட்டிற்சென்று
சற்குருவாங் கல்லுப்பு வழலையுப்பு
வருவிப்பீர் கல்பெண்ணை விட்டுநீரும்
வருவதற்கு வாய்வுசெயம் வகுத்துக்கொள்வீர். (174)

கொள்ளுவீர் குளிகைதனை வாங்கிக்கொண்டு
கூடுவீர் கேதாரக் காட்டைநோக்கு
விள்ளுவீர் பேச்சுரைக ளவர்க்கு நீரும்
வீரமதை யடக்கிமத வேள்தன்கிட்ட
அள்ளுவீர் கல்லுப்பு மூப்புதன்னை
அறிந்தெடுக்கக் கல்லாத்துக் கருகேயப்பா
துள்ளுவீர் கெவுனமுறை பறவைபார்க்கம்
தூக்கிவிட வாசியைச்சற் றுசிப்பீரே. (175)

ஆசித்தாற் தேகமெல்லாங் கல்லதாச்சு
அப்பனே யிச்சிலைபோல் பேச்சும்போச்சு
நேசித்தா லணுவளவு கொண்டுபாரு
நிமிஷத்திற் சுமடுகட்டிக் குளிகைபோடு
பேசித்தான் முடியுமுன்னே வந்துசேர்வீர்
பித்தர்களே அரிவைதனை விட்டுநீரும்
வீசித்தான் லகுதனில் கெவுனஞ்சாடும்
விடையமிதை யறியாம லறிவிப்பீரே. (176)

அறிவிப்பீர் மன்மதவே ளிடத்தில் நீரும்
அப்பனே கல்சிலைக்குப் பேச்சுண்டாக்கி
தருவிப்பீர் எழுபோகங் கலைக்கியானங்கள்
தையல்ரதி யவட்குமிவள் மிச்சமாக
குருவிப்பீர் பதுமைமின்னாள் ரூபந்தன்னில்
கோட்டியாம் பதுமையதின் குணத்தின்செய்கை
பொருவிப்பீர் மனமுருக்கிப் பதுமையாலே
பொருதுமதன் கணைகளைந்தும் போகமாமே. (177)

போகமப்பா யெழுபோகங் கல்பெண்தன்னில்
போக்கியே மன்மதவே ளிடத்தில்விட்டு
மோகமப்பா கொளும்படிக்குப் பேச்சுண்டாக்கி
மூப்பூவை நீங்கள்சும டெடுத்துக்கொண்டு
யோகமப்பா அடைவதற்குக் கற்பமுண்ண
ஓர்நொடியில் குளிகைதன்னை யடக்கிப்பாரு
தேகமப்பா நினைத்தயிட மங்கேசெல்லும்
தேசஉப தேசமயந் தெரிவித்தேனே. (178)

அறிவித்தார் கொங்கணவர் கருவூரார்க்கும்
அகத்தியமா முனிக்குமுனி யானபோகர்
விரிவித்தா ரவர்களுமே மனம்நொந்தேதான்
பேசாமல் பாதமதில் விழுந்துபின்னும்
தெரிவித்தா ரகமங்க ளிருவர்க்கேதான்
தெளிவுதெரிந் திருளற்ற சித்தநாதன்
விரிவித்தா ரஷ்டகர்ம யோகமார்க்கம்
விசைகுளிகை பறவையயஞ் செலுத்துவீரே. (179)

வீரமென்ற வீரமதை யடக்கிப்போடு
விசாரமுற்ற கிருட்ணமய மங்குண்டாகும்
தூரமென்று நினையாதே நொடியிற்செல்ல
துரந்தரிக்கக் குளிகைதனை யடக்கிக்கொண்டு
சாரமென்ற கல்லுப்பு முப்புதன்னை
சற்குருவென் றெண்ணியேடு கல்லாறுதன்னில்
ஊரமென்ற கெவுனமாத் திரையையீய்ந்து
உகந்துசிலைக் காவிபடைத் தோட்டினாரே ()

ஓட்டியதோர் கொங்கணருங் கருவூராரும்
உயர்ந்துபறந் தேயிவர்கள் கேதாரத்தில்
காட்டிலே சென்றுகல் லாறுதன்னில்
கருதியதோர் கல்பெண்ணை முக்கிமூழ்கி
நாட்டினார் மதனவே ளிடத்திலேதான்
நாடியதா லுரைந்தமொரு கல்லுக்கட்டி
மூட்டினார் சுமடுசும டாக்கிக்கொண்டு
மூன்வந்தார் குளிகைதனைப் பின்வைத்தாரே ()

வைத்ததொரு கொங்கணரே கருவூராரே
வாதமுறை கல்பமுறை யிதற்குள்ளாச்சு
எத்திசையிற் றிரிந்தாலு மிதுகிட்டாது
என்மக்காள் கற்பமுண்டு மிச்சந்தன்னை
அத்திகிரி மலையோரங் குளிதான்வெட்டி
அப்பனே யாருமறி யாமல்நீயும்
புத்தியிது யென்றுவைத்து வருவீராகில்
புகலுவேன் கிருபைமயம் பிரியந்தானே (182)

பிரியமதை யென்னசொல்வே நீங்கள்செய்த
பிரபலச் சித்ததிக மாகிருஷ்ணந்தான்
அறியுமதை யிதுவரையு மூங்கள்ஞாயம்
அப்பனே கல்பதுமை நடக்குமாயம்
நெறியுமதை வீரடக்கும் பஞ்சபாசம்
நெஞ்சமதிற் கவர்பிரியுங் கபடம்நீக்குங்
குறியுமதை யறிந்தவர்போ லிருக்குநெஞ்சங்
கோடான கோடிசித்துங் கூர்ந்துபாரே. (183)

கூர்ந்துபார் கல்பதுமை தன்னை நீங்கள்
கூட்டிவந்த ஆக்கிருஷங் குணத்தின்போக்கு
தேர்ந்துபார் சிவமதனை யதனிற்போக்கத்
தெரியாத கொங்கணரே கருவூராரே
நேர்ந்துகொண்டு வந்துவிட்டீ ரென்மூன் நீங்கள்
நேரிசையா மென நினைந்து கல்விப்போர்கள்
சார்ந்துசெய்யில் யோகமுறை கற்பமுண்டு
சஞ்சரித்துச் சிவமயமொன் றில்லைபாரே. (184)

பாரென்றேன் கேதுமய மதனைச்சைய நீர்
பார்த்தவர்க ளாயிருந்துங் கற்பந்தன்னை
ஆரென்று கொண்டுவந்து விட்டீரையா
அருமையுள்ள கொங்கணரே பதுமையோடு
போரொன்று செய்யுமுறைக் கிதுவேமார்க்கம்
பேச்சற்ற கற்சிலையின் பிரிவுமூர்க்கம்
நேரொன்று அழைத்தவிதம் ஆதிநாதன்
நெறியழிந்து மதிகுலைந்த வகைபோலாச்சே. (185)

ஆச்சப்பா கேதாரந் தன்னிலேதான்
அதிரூப மானகல்லுப் பெண்ணுமங்கே
சூச்சமப்பா போகம்விந்து நாதங்கல்லாம்
சொர்ணமயம் நேர்மணலாய் முப்புவுப்பாய்
நீச்சப்பா கல்லாருய்ச் சலமதாக
நின்றவர்ம மாறிவா ருலகத்தோர்கள்
பேச்சப்பா கொங்கணவ ரிருவராலே
பேரான மகிமைதனைப் பெற்றவாரே. (186)

வாரான உலகமதில் மனிதர்கோடி
வாதமுறை செய்வதற்குப் பலநூல்பார்த்து
நீராக முதல்மூன்று வகையதன்னில்
நீங்கியதோர் நாதத்தை வாங்கிவந்து
கூராக ரவியில்வைத்துத் தெளிவுண்டாக்குங்
கொடியதொரு கிரிகையின் மார்க்கந்தன்னை
ஆரார்க ளறிவார்கள் உலகத்தோர்கள்
அப்பனே நாதவிந்து சடைத்தவாரே. (187)

சடைத்ததொரு கொங்கணரே யினிக்கேளப்பா
சஞ்சரிப்பா யவ்வனத்தில் அதனுக்கீடாய்
கிடைத்ததொரு காமப்பால் கல்லுப்பாக
வெட்டியெடுப் பாருண்டு அறியாமூடர்
அடைத்தெடுக்க மனந்துணிவீ ரின்னம்நீங்கள்
துலையாத யிருள்மாய்கை நிலையைநீக்கக்
கிடைத்ததிலும் பொருளாசை மிகவேயுண்டு
கெடிராயன் வலையறுத்து மீளுவீரே. (188)

கெடிராயன் மன்மதவேள் வலையைநீக்கிக்
கொண்டுசென்று வருவீரால் பெரியோராகும்
துடியாக அவ்வனத்தில் கனகம்போக்கு
தோகையரின் ஞசைவிட்டு வருவீராகில்
அடியார்க ளென்றுனை நாம் சரியென்றெண்ணி
அப்பாலுந் தாசனென அறியுமார்க்கம்
படியாக அடையாளந் தருவீராகில்
பதசேர்வை பெற்றதொரு பாலராமே. (189)

பாலகரே கொங்கணரே யென்மக்காகேள்
பாலாறு மன்மதப்பால் கல்லாருரும்
நீலகரே மால்சயனம் மங்குண்டாகும்.
நீனிலத்தி லறிந்தவரும் நெடியோன்சாய்கை
ஏலகரே விட்டிருவர் வருவீராகில்
என்னசொல்வேன் கல்லுப்புக் குள்ளஞாயம்
சாலகரே யிவ்விதியி னடத்தைநீக்கிச்
சஞ்சரிப்பீர் கொங்கணரே தாசர்நீரே. (190)

நீரான பனிநீரை மூப்பூவென்று
நீனிலத்தி லறியாதார் பலநூல்பார்த்து
மாரான மாதருடன் மானிலத்தில்
மயங்கியே திரிவார்க ளறிவுகெட்டோர்
வாரான நூலினுட நுட்பம்விட்டு
வகைவிட்டு முறைதப்பி மார்க்கங்கெட்டு
சாரான கைவளிநீ ரென்றேயெண்ணி
சஞ்சரிப்பார் போலிருவர் தமக்குண்டாச்சே. (191)

ஆச்சப்பா கல்லுப்பு பனியுப்பாச்சு
அதையறிந்து எடுத்தருந்தக் கற்பமாச்சு
நீச்சப்பா கல்லாறு கேதாரத்தில்
நீயிந்த மாய்கையதை விட்டுப்பின்னும்
போச்சப்பா யில்லையென்று சொல்வாரானால்
பெரியசிவ யோகமதை ரதிக்குப்போதி
பாச்சப்பா வாசிமயம் நிலையாய்நிற்கப்
பாவகமே தாவிப்பீர் சிறுவர்தாமே. (192)

தாமிருவ ரடஞ்செய்த வகையைப்போல
தாபரத்திற் கேதாரம் தன்னில்நீறும்
நாமிருவர்க் கேயீயுங் குளிகைதன்னை
நாவடக்கி மன்மதவே ளிடத்திற்செல்க
ஓமிருவ ரெனவருவார் கொண்டேசென்று
ஓடினார் கெவுனமதில் நாடினார்மன்
போமிருவர் திரும்பிவந்த வரலார்மார்க்கம்
போக்காக விதித்தவிதி புகலக்கொண்டே. (193)

பல்கொண்டு மேபோக ரிடத்தில்வந்து
பதுமைதனை விட்டுவந்தோங் கற்பமுண்ணை
மல்கொண்டு மும்மதத்தால் விளைந்தகல்லு
மாலைமதஞ் சேலைமதம் வகையின்போக்கு
வில்கொண்டு வேல்விழிப்பெண் ணாலேயெங்கள்
விகாரமது தீரவுண்ண விரும்பியுங்கள்
சொல்கொண்டு திரும்பிவந்தோம் போகமார்க்கம்
செவியென்றார் மூப்பூவை யெறிபென்றாரே. (194)

எறியென்ற போதிருவர் கொங்கணவர்கூடி
எறிந்திடவே கிணறதிலே சலமதாச்சு
குறிகண்ட ரிசியொருவ னதுதான்பார்த்து
கூர்ந்தெடுத்துக் கற்பமுண்ண பின்னுமற்று
தரிக்கின்ற அக்கினிப்பை அருகின்மார்க்கத்
தடக்கியே மூழ்காமல் தானேமூழ்கி
நெறிகொண்ட கல்லதுபோல் நின்றானின்னும்
நீயறிந்தா லவ்விடத்திற் சென்றுபாரே. (195)

பாரப்பா கல்லுருவாய் நின்றமார்க்கம்
பரப்பிரம வஸ்துவென்ற செயநீர்தீர்க்கம்
ஆரப்பா அறிந்தவர்கள் ஒருவரில்லை
அப்பனே தேன்மலையி னதனுக்குள்ளே
நேரப்பா நிற்கிறு னதின்மேற்காக
நிலைகண்டு கல்லுருவை மச்சங்கண்டு
சேரப்பா விருச்சமுமங் கதிலோர்தீபச்
செயலிதனை யறிவதற்கோ ரிரவுநேரே. (196)

நேரான சோதிமர விருட்சந்தன்னில்
நிலைகண்டு அதின்கிழக்கே தெற்கதாக
ஆரான சாவல்பூணத் தில்லைமரமொன்று
துருவாச மாமுனிவ னொருவனாலே
பேரான வஸ்துவதை மறைத்துப்போட்டார்
புதைபொருளெல் லாமுனக்கு வெளியாய்ச்சொன்
யேரான யிருவிருட்சம் நடுவிற்பாரு [னேன்
என்மகனே கோழிமுக்கி கோழியுண்டானென்றே()

சாவல்மாளா

கோழியுண்டான் கோழிமிண்டான் தில்லைப்பாலை
குக்குடப்பூச் சாவல்பூ டென்றுஞ்சொல்வார்
வாளிகொண்டு நாவிகொண்டு சிலைகள்கொண்டு
வதைப்பதுபோல் நொடிநேரந் தன்னிலிந்த
காளிகொண்ட கூளிகண்ட தில்லைப்பாலை
கறந்துவந்து கத்திமுனை தன்னில்தொட்டு
ஊளியமாய் கடுஞ்சாவல் கிணையாய் நீயும்
உத்தமனே சிறுவிடைதான் காலிற்கட்டே. (198)

கட்டப்பா ஓர்பறவை தன்னிலேதான்
கத்திபட்டுக் கடுஞ்சாவல் பட்டுமானும்
மட்டப்பா யிதுவல்லால் மூப்பூதிரட்டு
மைந்தனே கபாலஓட்டில் மைக்கருக்கி
ஒட்டப்பா வண்டரிச்ச பலையிலேயே
ஒடித்துவந்து யிசங்குமுன்னால் திசையைநோக்கி
இட்டப்பா உருவகுத்துப் பெயரைச்சுற்றி
என்மகனே முன்சொன்ன மையைச்சாற்றே. (199)

சாத்தப்பா வையம்வேப் பெண்ணெய்தன்னை
தாரணியில் மூன்றோட்டில் துணியில்மூக்கி
ஏத்தப்பா தீபமதிற் பொருத்திக்கொண்டு
என்மகனே எடுத்ததொரு மையை நீயும்
பூத்தப்பா மதனப்பால் செயநீர்தன்னை
புகட்டியே தாம்பூரச் சிமிழிற்சேர்க்க
கூத்தப்பா வென்றயெமன் கைகளுள்ளாச்சு
கொடியதொரு பிரமலபி தட்டலாச்சே. (200)

ஆச்சப்பா யிப்படி நீ செய்தாயாகில்
அப்பனே வுனக்கீடு யாருமுண்டோ
ஏச்சப்பா பிடுங்கிடுவா ரின்னூல்தன்னை
யேமாந்து போகாமல் மறைத்துப் போடு
காச்சப்பா சவமெடுக்க நேரம்பார்க்க
காலாதி காலனுனக் கேவலாளாம்
மாச்சப்பா வொன்றுமில்லை மறைப்பொன்றில்லை
மைந்தனே யிந்தவித்தை மையைச்சேரே (201)

சேத்தப்பா மௌனமா யிருந்துகொள்ளு
சிவனாணை உமையாணை யின்னுங்கேளு
கூத்தப்பா யெமக்கூத்து கடிகைப்போதில்
கூரறிய தக்காலி தழையைச்சுற்றி
ஏத்தப்பா முன்சொன்ன படியே நீயும்
என்மகனே எழுத்தோலை சுள்ளைதன்னில்
நீத்தப்பா வெள்ளாவி மயானந்தன்னில்
நீத்தியபின் மரணமின்னூல் சூட்சமாச்சே. (202)

எறியென்ற யோதிருவர் கொங்கணவர்கூடி
எறிந்திடவே கிணறதிலே சலமதாச்சு
குறிகண்ட ரிசியொருவ னதுதான்பார்த்து
கூர்ந்தெடுத்துக் கம்பமுன்னை பின்னுமற்று
தரிக்கின்ற அக்கினிப்பை அருகின்மார்க்கத்
தடக்கியே மூழ்காமல் தானேமூழ்கி
நெறிகொண்ட கல்லதுபோல் நின்றுகின்றும்
நீயறிந்தா லவ்விடத்திற் சென்றுபாரே. (195)

பாரப்பா கல்லுருவாய் நின்றமார்க்கம்
பரப்பிரம வஸ்துவென்ற செயநீர்நிற்கும்
ஆரப்பா அறிந்தவர்கள் ஒருவரில்லை
அப்பனே தேன்மலையி னதனுக்குள்ளே
நேரப்பா நிற்கிறு னதில்மேற்காக
நிலைகண்டு கல்லுருவை மச்சங்கண்டு
சேரப்பா விருச்சமுமங் கதிலோர்தீபச்
செயலிதனை யறிவதற்கோ ரிரவுநேரே. (196

நேரான சோதிமர விருட்சந்தன்னில்
நிலைகண்டு அதின்கிழக்கே தெற்கதாக
தூரான சாவல்பூணத் தில்லைமரமொன்று
துருவாச மாமுனிவ ரொருவராலே
பேரான வஸ்துவதை மறைத்துப்போட்டார்
புதைபொருளெல் லாமுனக்கு வெளியாய்ச்சொன் [னேன்
யோரான யிருவிருட்சம் நடுவிற்பாரு
என்மகனே கோழிமுக்கி கோழியுண்டானென்றே()

சாவல்மாள

கோழியுண்டான் கோழிமிண்டான் இல்லைப்பாலை
குக்குடப்பூச் சாவல்பூ டென்றுஞ்சொல்வார்
வாளிகொண்டு நாவிகொண்டு சிலைகள்கொண்டு
வதைப்பதுபோல் நொடிநேரந் தன்னிலிந்த
காளிகொண்ட கூளிகண்ட இல்லைப்பாலை
கறந்துவந்து கத்திமுனை தன்னில்தொட்டு
ஊளியமாய் கடுஞ்சாவல் கிணையாய் நீயும்
உத்தமனே சிறுவிடைதான் காலிற்கட்டே. (198)

கட்டப்பா ஓர்பறவை தன்னிலேதான்
கத்திபட்டுக் கடுஞ்சாவல் பட்டுபோனும்
மட்டப்பா யிதுவல்லால் மூப்பூதொட்டு
மைந்தனே கபாலஓட்டில் மைக்கருக்கி
ஒட்டப்பா வண்டரிச்ச பின்னையிலேனாலே
ஒடித்துவந்து யிசங்குமுன்னால் திசையைநோக்கி
இட்டப்பா உருவகுத்துப் பெயரைச்சுற்றி
என்மகனே முன்சொன்ன மையைச்சாற்றே. (199)

சாத்தப்பா வையம்வேப் பெண்ணெய்தன்னை
தாரணியில் மூன்றோட்டில் துணியில்முக்கி
ஏத்தப்பா தீபமதிற் பொருத்திக்கொண்டு
என்மகனே எடுத்ததொரு மையை நீயும்
பூத்தப்பா மதனப்பால் செயநீர்தன்னை
புகட்டியே தாம்பூரச் சிமிழிற்சேர்க்க
கூத்தப்பா வென்றயெமன் கைகளுள்ளாச்சு
கொடியதொரு பிரமலபி தட்டலாச்சே. (200)

ஆச்சப்பா யிப்படி நீ செய்தாயாகில்
அப்பனே வுனக்கீடு யாருமுண்டோ
ஏச்சப்பா பிடுங்கிடுவா ரின்னூல்தன்னை
யேமாந்து போகாமல் மறைத்துப் போடு
காச்சப்பா சவமெடுக்க நேரம்பார்க்க
காலாதி காலனுனக் கேவலாளாம்
மாச்சப்பா வொன்றுமில்லை மறைப்பொன்றில்லை
மைந்தனே யிந்தவித்தை மையைச்சேரே (201)

சேத்தப்பா மௌனமா யிருந்துகொள்ளு
சிவனுணை உமையாணை யின்னுங்கேளு
கூத்தப்பா யெமக்கூத்து கடிகைப்போதில்
கூரறிய தக்காலி தழையைச்சுற்றி
ஏத்தப்பா முன்சொன்ன படியே நீயும்
என்மகனே எழுத்தோலை சுள்ளைதன்னில்
நீத்தப்பா வெள்ளாவி மயானந்தன்னில்
நீத்தியபின் மரணமின்னூல் சூட்சமாச்சே. (202)

சூக்ஷமப்பா கிரிதனிற்போய்த் தேடவேண்டாம்
சூட்சாதி சூட்சமதுன் தேகத்துள்ளே
சாச்சதப்பா அயன்பீடந் தெரியவேணும்
சிவாயமெனுங் கயிலாசச் செயநீர்தன்னை
சேத்தபபா நொடியொன்றில் விநாடியொன்றில்
சீக்கிரத்தில் முழுங்கியே அமுர்தங்கொள்ளு
வாச்சுதப்பா சிவயோக நிஷ்டைமார்க்கம்
மைந்தனே வகைபறியப் பின்னுங்கேளே. (203)

வாசிவிபரம்.

கேளப்பா அங்வங்சிங்ஒங் கிரியுஞ்சிவாயாவென்று
கெணிதமொன்றில் செல்லுமட்டுஞ் செபிக்கவேணு[ம்
நாளப்பா நாளொன்றுக் கணுவளவுதானும்
நாடியே கெற்பமெனுஞ் சிசுவிழுந்தமார்க்கம்
பாளப்பா சுவாசமது போகாமற்தான்
பார்தனிலே விழுந்தசிசு அங்வங்கென்று
வாளப்பா அருமார்க்க மீசன்பாதம்
வழுத்தியே யோர்மனது செலுத்தும்வாரே. (204)

வாரென்ற வகையிதுதான் சொல்லக்கேளு
வாசியெனுஞ் சுவாசமதைப் பாழ்போக்காமல்
காரென்ற வகையாய்மூன் னட்சரத்தைச்சேவி
கயிலாசத் தகண்டவெளி காணலாச்சு
கூரென்ற சிவமடக்கி மவுனஞ்சாதி
கெவுனமட்டுங் கயிலாசச் செயநீர்தன்னை
தாரென்ற அமுர்தமாய் முழுங்கிப்பாரு
தாசனே அடையோக மதிலுண்டாச்சே. (205)

ஆச்சப்பா யோகமுறை யிதிலுண்டாச்சு
அப்பனே சிவகுருவைக் கைகண்டாச்சு
நீச்சப்பா கசந்தனிலே யோகமார்க்கம்
நீநீஞ்சுமண்டலந்தா னிருந்துபாரு
பாச்சப்பா அபானமதிற் சலத்தைநீயும்
பாசிமலச் சுத்திசெய்யில் வாசிமார்க்கம்
வீச்சப்பா சிவசுழியைக் கைலாசத்தில்
வீரடங்கிக் கல்விதனைச் செய்துபாரே. (206)

செய்துபார் சிவமதுதான் வெளிவிடாது
 செலுத்தியதோ ரிசிசிசுராத் தரித்திடாது
எய்துபார் மதநூலைச் செபித்தபேர்கள்
 எவராலு மூனைமடக்கக் கூடாதப்பா
உய்துபார் நீயதனைச் சிவயோகத்தில்
 உத்தமனே சிவமதுதான் கயிலாசத்தில்
கொய்துபார் ரிசிகெற்பந் தரிக்குமார்க்கம்
 கொண்டமட்டும் யேறியிரு குதிரைப்போக்கே. (207)

போக்கப்பா சத்திசிவ மனம்போற்சித்தி
 போனதைநீ வெளிவிட்டுச் செலுத்துமார்க்கம்
தாக்கப்பா நெஞ்சமதிற் கொள்ளமட்டும்
 தாக்கும்போ துத்தமனே அங்வங்ஓங்கிரியுஞ்சிவாய
ஆக்கப்பா சென்றயட்டு முன்போல்நீயும் [வென்று
 அப்பனே கொண்டமட்டுஞ் செபிப்பாய்நீயும்
நீக்கப்பா கோபமுதல் வேர்வைரெண்டும்
 நீநீக்கிச் சிவயோகஞ் செய்துபாரே. (208)

பாரப்பா முன்சொன்ன உருவை நீயும்
 பார்தனிலே செபிக்க அயன் விதியாலென்ன
நேரப்பா வந்திறங்கு மெமனுலென்ன
 நீனிலத்தி லக்கினியால் சிவத்தாலென்ன
கோரப்பா பிரமலபி யிடியாலென்ன
 கொண்டமட்டுஞ் சிவயோக மடக்கும்பேர்க்கு
வீரப்பா வென்றதுதான் அடக்கிக்கொள்ளு
 வேர்வைத்துப் போகாமல் விரும்புவீரே. (209)

வீரென்ற கோபமதை யடக்கிக்கொள்ளு
 வேதாந்தத் துட்பொருள்முன் விஞ்சையோது
போரென்ற மனமதப்போர் செய்துபாரு
 பெரியசிவ யோகமது செய்யும்போது
சாரென்ற வஸ்துவதில் கயிலாசத்தில்
 சார்ந்துசிவ சுழிமூனையி லடக்குமார்க்கம்
ஆரென்ற பேரறிவார் சிவயோகத்தை
 அப்பனே சதாசிவத்தின் ரூபந்தானே. (210)

அருபமது கண்டுகொண்டால் பாணப்பாழாய்
ஆச்சுதப்பா பிரமலபி விட்டுப்போச்சு
சொருபமது கண்டுகொள்வான் சிவத்தின்கூட்டில்
சிவம்போக்கி சவம்நீக்கித் தவமுண்டாச்சு
பருபமது செய்துகொள்ள வகைதோணுமல்
பார்தனிலோ ராதிசித்த னொருவன்றானும்
பொருபமது கல்விசெய்ய உடல்தீதிண்ண
புதுமைசெய்து யிடைக்காட்டா ரெனவுற்றாரே.

உத்தமதொரு சுவாசமதின் வகைதான்கேளு
உயிரெழுத்தென் றேநினை நீ முன்சொல்தானும்
அத்தப்பா சிரசுவாய் நாசிநெஞ்சம்
ஆகியநல் வாசல்சிக் கடைப்பெல்லாந்தான்
சித்தமப்பா கூர்ந்துபார் வெளியாய்த்தோன்றும்
சிவயோக மடைவதற்கு வழியைப்பற்றுங்
கத்தனை னுங் கயிலாசந் தன்னிற்சிக்கக்
கருத்துகந்து ஓர்மனதாய்ச் செபித்திடாயே. (212)

செபித்திடவே யீசன்விதி யதனுலென்ன
செகத்திலுள்ள தீநெருப்புத் தனலாலென்ன
அவித்திடவே சிரசதிலே சுவாசந்தன்னை
அப்பனே யடக்கும்வழி யறிந்தாயானல்
குவித்திடவே கோவில்கண்ட யிடங்கள்தோறும்
கோட்டிகொண்டு திரிந்ததினு லாவதென்ன
நலித்திடவே மும்மூர்த்தியா ரேனுமுன்னை
நசித்தாலு முசித்தாலு நலிவராதே. (213)

ஆரூத தேகமது பூர்வக்கியானம்
அறிந்துகொண்டு சிவசெந்து யெதிலுமுந்தன்
போரூத சதாசிவத்தைப் பெறுவாயாகில்
போக்கறிந்து கூடதனை யடக்கிக்கொள்ளு
பூரூத பேர்கள்கண்டால் யிடைக்காட்டானய்
புகுந்துதவ மழிவுசெய்வான் புலிகள்சிங்கம்
வாரூத வஸ்துவென்ன உலகந்தன்னில்
வருத்துவதல் லால்விருட்சம் வளையும்பாரே. (214)

பாரப்பா சிவந்தனை நீ யறிவினாலே
பார்தனிலே சடலமது அழியாமற்தான்
சாரப்பா சுவாசமதை அடக்கிக்கொள்ளு
சாநிலை நிர்ணயமறிந்தால் சாகாமற்றான்
பேரப்பா யென்னசொல்வேன் பதினெண்பேர்கள்
பெற்றதவங் கற்றவித்தை பெரிதோயில்லை
சேரப்பா சிவசுழியைக் கயிலாசத்தில்
சேர்ந்துசிக்கில் கடிகையொன்றில் சிவ யொட்டாதே

ஒட்டாது சிவமதுதான் கயிலாசத்தில்
ஓடிரச பாணமது பொசித்துமீளும்
மூட்டாது வழியறிந்து யிறங்கும்போது
மூனை நினைவு வினையறிவு களவுதோற்றும்
தட்டாது நிசிவேளை தோற்றுமார்க்கம்
தனையறிந்து வோர்மனது தரித்தாற்சித்தி
பட்டாது பூனைநெரிப் பசுபோல் யோகம்
பற்றுதற்கு மனக்குரங்கு மதுகொட்டாவி. (216)

கொட்டாவி தனையடக்கிக் கொள்ளமாட்டார்
கொடியசிவ அடையோகஞ் செய்தோமென்பார்
அட்டாவ தானவித்தை பிரிப்போமென்பார்
அப்பனே அதையறிந்தால் அயன்தானேரோ
விட்டாட்டு வார்வாசி யிருபத்தொன்றில்
விளம்பினேம் ஆயிரத்தி யிருநூறுசேர
புட்டோடுங் கடிகையொன்றில் சுவாசமூர்ச்சை
போகாமல் வழியறிந்து முழுங்கிக்கொள்ளே. (217)

கொள்ளப்பா கொட்டாவி விக்கல்ரெண்டும்
கொள்ளாட்டால் சுத்தவெளி நாசமாகும்
தள்ளப்பா கயிலாசச் செயனிருள்ளே
தள்ளியபின் விக்கல்தனை முழுங்கிப்பாரு
சுள்ளப்பா கயிலாசந் தன்னிற்சேர்ந்து
சுருக்கெனவே பிரிவுசெய்து வாசிதன்னில்
விள்ளப்பா சுழிமுனையிற் செல்லுமாயம்
வீரடங்கிப் போம்வழியை விரும்பிக்கொள்ளே ()

கொள்ளுமுறை யின்னமுநான் சொல்லக்கேளு
குவலயத்தில் பெருவிக்க லெடுத்தபேர்க்கு
விள்ளுவாய் மனம்பற்றிச் சிந்தித்தொன்றை
விளம்பவே யவ்வழியை விட்டுநீக்கித்
தள்ளுவாய் மனக்கவரின் வாசிமார்க்கந்
தனையறிந்து மனமுறிந்து யிருளை நீக்கி
தெள்ளிதமி ழாராய்ந்து யிருளை நீக்கி
தெளிவொளிவு ஞானவழி கிட்டொண்ணுதே. (219)

கிட்டவொண்ணு தின்னூல்தான் கிட்டும்போது
கெடிராயர் தாமறிந்தா லுன்னைக்கண்டு
துட்டனென்று சித்திராக் கினைசெய்வார்கள்
தூஷணிப்பார் விக்கலுக்குத் திஷ்டாந்திரலோபம்
பட்டமது யென்னவென்றுல் பகரும்வாரு
பகர்ந்தவர்க்கு யெதுவேணு முறைப்பாயாகில்
நட்டகல்லும் சாய்ந்தாப்போல் பதறிவீழ்வார்
நடுக்கமுற்றுன் விக்கல்தனை மறந்திட்டானே. (220)

மறந்துவிட்டான் சிவயோக மிகழ்ந்துவிட்டான்
மைந்தனே அவ்வழியில் மனம்வேருக
பறந்துவிட்டான் மனக்குரங்கால் நலத்தேவாசி
பறக்கவிட்டான் சிறக்கவிட்டான் பாரிலெங்கும்
கறந்துவிட்டான் தேகமதி லுள்ளவேர்வை
காய்ச்சிவிட்டான் வாசிகொண்டு சூட்சிதன்னை
யிறந்துவிட்டா னடையோகச் சுழியிற்சொக்கி
யேதறிந்தா னிறக்கமய மறிவில்லானே. (221)

அறிவில்லான் சுவாசமதை யடக்கிப்பார்ப்பான்
அடையோகங் கயிலாசந் தன்னிற்சிக்கி
பிரிவில்லா மற்படிக்குச் சிரசில்மூட்டி
புகையெழுப்பி மூளைதட்டிச் செவியிற்சொட்டி
பொரியில்லா தருள்வெடித்து சிவத்தைப்போக்கி
பூவுலகில் தவம்நீக்கிச் சவமதாகுன்
நெறியில்மா தைத்தவிர்த்துக் கற்பமுண்டு
நிட்சயிக்கும் நிர்மூடர் மகிமைபாரே. (222)

பாரப்பா கல்பதுமை விதியின்மார்க்கம்
படைத்ததென்று நீங்களுமே பெரியோரய்யா
நேரப்பா கல்விசெய்தேன் யோகமிஞ்சி
நேரில்லை அயனுரைகள் யாதொன்றில்லை
கூரப்பா அனுபோகம் அசையாவஸ்து
கொடியதொரு மதனப்பால் கடலைச்செயனீர்
ஆரப்பா அறிந்தவர்க ளப்பாமுப்பூ
அறிந்தவரே ரிசிகெற்ப மறிவிப்பாரே. (223)

பாருநீ யிந்நூலின் முறைதப்பாமல்
பகர்ந்திட்டோங் கௌமதி நூல் விதியின்மார்க்கம்
தீருநீ முன்முறையின் பின்முன்னாகி
தெரிந்தெடுத்து நெஞ்சகத்தில் தெளியும்போது
தேருநீ வாதமுறை கற்பமார்க்கம்
செய்கைதனை யறிந்தவர்க்கே சித்தியாகும்
தூருநீ புதைத்துவிடு வெளிவிடாதே
தூரந்தரிக்கத் தம்பன நீர் தன்னியங்கேளே. ()

எலிநீறு.

தன்னியத்தில் தம்பிக்கவகை தான்கேளு
சவுத்தயெலி மூலவிஷ யெலிதானப்பா
சென்னியதில் பிடித்துநீ சலத்தில்விட்டு
சிரசுடல்ரெண் டாக்கிலொன்று மிதக்கும்பாரு
இன்னிலத்திற் கீழேநீ வைத்திடாமல்
யெடுத்துவந்து ஆவின்கன் றிடுகுஞ்சாணி
அன்னியத்தி லடையாளக் கவசம்பூசி
அப்பனே அதைவைத்துத் திருநீறுக்கே. (225)

ஆக்கப்பா மயானமதி லெரியுமங்கை
அதன்மேலேவைத்து நீ விபூதியாக்கி
நோக்கப்பா தணிந்ததொரு தண்டநீரை
நொடித்திடுவா யறிவாக நெஞ்சுநேரே
போக்கப்பா நிற்பாழாம் குரும்பைமார்பு
போன்றிவிடுஞ் சிறுகுழந்தை போல்நெஞ்சாகும்
தாக்கப்பா மிதந்ததொரு தண்டநீரால்
தள்ளுமடா கும்பமென்ற தன்யந்தானே. (226)

தானென்ற ஆணுவத்தா லிருந்திடாமல்
தம்பிக்கு விந்தவித்தை தன்னைப்பார்த்து
மானென்ற நீதிமுறை யுள்ளோர்தன்மேல்
வர்மம்வைத்துக் கருத்தொழில்கள் செய்வாயாகில்
சூனென்ற பாவம்வரும் வேண்டாங்கேடு
சிவனாணை யுமையாணை திருமாலாணை
கோனென்ற இடைக்காட்டுச் சித்தனாகி
கூடழிந்து போனகதை கூர்ந்துபாரே. (227)

பாசாணச் சுண்ணம்.

கூர்ந்துபார் பாசாணச் சுண்ணந்தன்னை
கொடியதொரு தீங்குசுப்பு வழலைமுப்பு
நேர்ந்துபார் படிகவெள்ளைக் கட்டிவாங்கி
நீனிலத்தில் மதனப்பால் செயனீர்தாக்கி
சேர்ந்துபார் ஒருசாம மறைத்து நீயுஞ்
சீலைமண்ணோர் கவசமது செய்துபோயும்
தேர்ந்துபார் கண்விட்டு உருகியாடும்
தெளிந்துகொள்ளு குரோதிவிபின் பற்பந்தானே. ()

நன்றான பாசாண பற்பசுண்ணம்
நாட்டினோர் பதினெண்பேர் மறைத்துப்போட்டார்
குன்றான மலைதனிலே யிருக்கும்போர்கள்
குருமுடித்துக் கற்பமுண்ண வேதையாலே
ஒன்றான பரப்பிரம வஸ்துமூலம்
ஓகோகோ தொட்டதொட்ட சித்துக்கெல்லாம்
வன்றான மனதுடையோ ருனைவந்தேய்ப்பார்
வகையறிந்து நூலடக்கி வளமையபாரே. (229)

பாரப்பா வாதமுறைக் கதிகசூட்சம்
பாசாணக் கட்டுவகை நிதிக்குமோட்சம்
சேரப்பா வங்கமுத விரும்புசெம்பு
சிவக்கும்போ தாசிமூனை கொண்டுதூண்டு
நேரப்பா கனகமயம் வயதீரைந்து
நிச்சயித்து அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னோம்
சாரப்பா பலநூல்கற் றோர்களேய்ப்பார்
சார்ந்தவரைப் பொய்க்கயற்றால் கட்டிக்கொள்ளே. ()

கொள்ளப்பா பொரிக்கபற்றல் கட்டி நீயும்
கோபம் அடம் கெருவமுதல் மூன்றும் நீக்கு
தள்ளப்பா பதினெண்பேர் பாடல்முற்றுந்
தள்ளிவிடு கௌமதிநூ லாடசித்து
துள்ளப்பா மதனப்பால் பூமிநாதந்
தொகுத்ததைநீ தொட்டதொட்ட சித்துக்கெல்லாம்
எள்ளப்பா அதிற்பாதி உமிழ்நீர்தொட்டு
ஈய்ந்தரைத்துப் புடம்போட்டு எடுத்துப்பாரே (231)

எடுத்துப்பார் எந்தெந்தச் சரக்கானாலும்
என்மகனே தீங்குசென்ற வழலையுப்பு
கொடுத்துப்பார் நூற்றெருவிற் புடத்தைப்போடு
கொள்கையென்ன தொட்டதொட்ட சித்துக்கெல்லா
தொடுத்துப்பா ரென்னசொல்வேன் அணுநீயியில் (ம்
தொகுத்தபடி முறைவிதியின் படிதப்பாமல்
தடுத்துப்பார் வியாதியெல்லா மோடிப்போச்சு
தாரணியில் சவித்தவஸ்தில் சாருண்டாச்சே. (232)

ஆச்சப்பா பின்னமொரு முறைதான்கேளு
அப்பனே பேய்ப்பீர்க்கி இலையைவாங்கி
காய்ச்சப்பா படரவியிற் சாறுவிட்டு
கரியுப்பில் நாலிலொன்று அளவாய்ப்போட்டு
பேச்சப்பா என்னசொல்வே னீரைந்தோர்நாள்
பிதற்றாதே கைவளித்த மண்பாண்டத்தில்
மூச்சப்பா ஒருவருக்கும் வெளிவிடாதே
முடிந்தசெந் தூரமுறை விதியைக்கேளே. (233)

விதியைப்பா ரிந்தவிதிக் கிதுவேசூட்சம்
விடையமதை யறிந்துகொண்டால் வாதமோட்சம்
கெதியைப்பார் பொதுமாதர்க் காசையாக
கெடுதலுற்று சிவசொத்து விடுவாயாகில்
மதியைப்பார் சிவகிருபை யழிந்துபோச்சு
மைந்தனே உன்தேகம் நாசமாச்சு
பொதியைப்பார் மலைதனிலே யிருக்கும்போர்க்கு
பூவுலகில் கற்பமுண்ண உரைத்தவாறே. (234)

வாறேநீ யறிந்தவுட னடக்கமாக
 வகையறிந்து மனம்நிறைந்து வடிவுகொண்டு
போறேநீ தொடுத்தலேந்து சிவசொத்தியந்து
 பிதற்றாதே அத்தனத்துக் காசியாதே
சாரே நீ யறிந்தவுடன் வெளியிடாதே
 சஞ்சரித்தோர் தன்னையும்போய்க் கயத்தாற்கட்டு
வேறேநீ மலையாக நினைந்திடாதே
 விதிவசத்தால் விளையுமூத்தாள் நெய்யைக்கேளே.()

மூலமுளைக்கு.

மூத்தவள்தன் வாகனத்து நெய்யைவாங்கி
 மூப்போது மூலமுளைக் கிடுவாயாகில்
காத்தமெனுங் கனமாகு மொருபோதுதன்னில்
 கர்மநோ யானாலு மதுவேதீர்க்கும்
ஆத்தமொரு பித்தமெனும் லகிரிநோய்கள்
 அடிக்குமடா அகத்தியனுன் சொன்னபோக்கு
பார்த்தவர்க் கிதையும்நீ வெளிவிடாதே
 பரமசிவ னுணையிந்நூல் பகரொண்ணாதே. (236)

பித்தலகிரிக்கு.

பகருவே னின்னமொரு வகைதான்கேளு
 பார்தனிலே லகிரியுற்ற பேர்கட்கெல்லாம்
புகருவே னுச்சிதனில் ரோமந்தன்னைப்
 போக்கியே அணுவளவு நகத்தாற்கீறி
நிகருவேன் வெள்ளைப்பா சாணந்தன்னை
 நீவாங்கி மிளகளவு பொடித்துத்தாக்கி
சிகருவேன் சுத்தநிலே மிலாக்காய்க்கட்டை
 சேர்த்தரைத்த சந்தனத்தை வளைந்திடாயே. (237)

வளைந்தொரு சுத்தநிலே கொளுப்புநெய்யை
 வாங்கியே சுடரெண்ணெய் வடிக்கும்பேர்க்கு
விளைந்தொரு துகையப்பா அன்பத்தொன்றில்
 விதிமூன்றதப் பாமலிப் படிநீயியில்
குளைந்தொரு புண்ணுச்சு லகிரிபேச்சு
 குவலையத்தில் மாந்தர்மன மெய்க்கலாச்சு
விளைந்தொரு மேதையின்தன் கனிதான்மிச்சம்
 விடையமூற்ற யெலுமிச்சம் பழச்சாருட்டே. (238)

ஊட்டப்பா எலுமிச்சம் பழச்சார்தன்னை
உத்தமனே லகிரியெல்லா மோடிப்போச்சு
மாட்டப்பா சலக்கரையில் நிருத்திக்கொண்டு
மைந்தனே வேகமறச் சலத்தைக்கொட்டு
நாட்டப்பா சுடரொன்றுக் கேதான்பத்து
நாடியதோர் சலக்குடத்தின் முறைதானூத்து
கூட்டப்பா யிப்படி நீ முறைதப்பாமல்
கூட்டியபின் தயிருஞ்சோர் பகுந்துகூட்டே. (239)

கூட்டுதற்குத் தனியெருமைத் தயிரதாகும்
குறியறிந்தார்க் கொடும்பாவி முன்னேயாகும்
ஆட்டுதற்குத் தம்பனத்திற் கிதுவேயாகும்
அப்பனே முன்சொன்ன விபூதியாகும்
ஓட்டுதற்கு மூத்ததலைச் சீலைமுக்கு
ஓகோகோ பேய்களரி யிடத்தில்நாட்டு
மாட்டுதற்குச் சயித்தானுக் கதியவாள்நெய்
மைந்தனே யின்னமொரு வகையைக்கேளே. (240)

வகையதுதான் வண்டரித்த பனையினோலை
வாங்கிவந்து குறித்தவன்றன் பெயரைக்கீறி
திகையதுதான் முறைவிதியின் மைநேராக
திகைத்தவகை கலையுரையும் நெய்க்கரியும்
பகையதுதான் செயுந்தொழிலுக்குச் சவுத்தங்காதில்
படும்படிமுன் னச்சாற்றில் மையைக்காண்பி
நகையதுதா னென்னசொல்வேன் சாலஞ்சாலம்
நாசவித்தை மோசமித்தை நரையத்தியே. (241)

ஈய்ந்ததைநீ பெருவிரலா மிடக்கால்தன்னில்
இருத்தியே மிதித்திடவே யிடங்கள்தோறும்
ஆய்ந்ததுவே ஆகாச மரத்தின்மேலே
அருந்தொழில்தான் செய்திடுவார் அனேகம்பேர்கள்
சாய்ந்தவர்கள் முறிந்துவிழும் வகையைக்கேளு
தரித்ததொரு சீட்டதிலே முறியும்பங்குக்
கீய்ந்ததிலே தீர்ந்திடுவாய் நேர்நேராக
டெரிமுறிந் தேவிழுவான் யிளிப்பின்கேளே. (242)

இனியாய மாகாசக் களக்கூத்தென்று
இவ்வுலகில் வெளமதி நூல் மதிக்கூத்தென்று
அனியாய மெத்தவுண்டு கோடாகோடி
அப்பனே யிதையறிந்து அடக்கிப்போடு
சனிஞாயம் பிடித்தவனே யின்னால்கற்று
சார்ந்தவரைக் கொன்றுவிழத் தகரச்செய்து
தனியாய மயன்விதியைத் தவிர்த்துக்கொள்ளும்
தனித்தனியே யிந்தமுறை தகர்த்திடாயே. (243)

தகர்த்திடுவாய் மறிந்தபடி முடிந்துபோகும்
தாரணியிற் தொணிமேழ முடைந்துபோகும்
நிகர்த்திடுவா யிந்தமுறைக் கைகிட்டாட்டால்
நீயுமொரு முன்முறையின் விபூதிதொட்டு
புகர்த்திடுவாய் நேர்நேரே தொடிக்கும்போது
பூதகண கெசகரண மிந்திரசாலம்
அகர்த்திடுவாய் பொடிப்பொடியாய் நொருங்கிப்போகும்
அப்பனே சிவமயமுங் கைக்கொள்ளாதே. (244)

கொள்ளாத குமரி அண்டம் வாங்குதற்கு
கூறுவோம வெள்ளைப்பா சாணந்தன்னை
புள்ளாக கட்டியிரு களஞ்சிவாங்கி
பெறுவாயின் மிருகநீர் படிக்குள்ளாக்கிச்
சுள்ளாத படியெரித்துச் சுத்தமாக்கி
சுரண்டியே நஞ்சுக்கொடி சுண்ணந்தன்னை
விள்ளாதே யொருவருக்கும் நெல்நீர்விட்டு
விரையவே யரைத்தபொடி வெல்லத்தூட்டே. ()

வெல்லத்தில் களஞ்சிமஞ் சாடியூட்டு
விழுமூன்று முக்கால்நா ழிகையிற்பாரு
இல்லத்தி லிருந்துயிந்தத் தொழிலைவிடாதே
ஈசுரன்மே லாணையிது கர்மத்தாலே
தில்லத்தி லிந்தவித்தை பாவிக்காச்சு
தேரையர் சல்லியத்தின் குருவேயாச்சு
குல்லத்திற் பிரளைய நீர் வாங்கும்பேர்க்கு
கொடியதொரு வசியமுமா மறைவுமாமே. (246)

ஆமப்பா கருணுவி விளையாமூலம்
ஆகியதோர் வசம்புடனே ராசன்தேவி
நாயப்பா வெளியுரைத்தோம் வேம்புவேர்த்தோல்
நல்மிளகு வகைமூன்று களஞ்சிமூன்று
ஓமப்பா படிசலமோர் மூன்றதாக
ஒடுக்கியதில் கொடியநஞ்சுக் கொடியின்சுண்ணம்
தாமப்பா மூன்முறைமஞ் சாடியீயத்
தகர்ந்ததுசண் டாளநோய்த்து வாலைமுதல்பாரே. ()

பாரப்பா என்னசொல்வே னுதிணுதன்
பார்தனிலே யிடைக்காட்டா னெனவேயுற்ருன்
சோரப்பா வகமதனுல் கல்லார்தன்னில்
சூதுசெய்து வந்தவுப்பைக் கிரியிற்சென்று
காரப்பா கல்லுருவாய் நின்ருனின்னும்
கதையதனை யறிந்துகௌ மதிநூல்தன்னை
சேரப்பா நெஞ்சகத்தி லடக்கிப்போடு
சென்றுபார் சிவகிருபை மார்க்கம்நன்றே. (248)

நன்றெனவே நான்சொன்ன படி நீயப்பா
நயந்துகொண்டு கௌமதியா மின்னூல்தன்னில்
குன்றென்ற கைலைவெள்ளி மலைபோற்சொர்னங்
குப்பல்குப்ப லாய்குவிக்கு முன்னூல்பின்னூல்
ஒன்றென்று தாமுறைத்தோம் பதினெண்பேர்கள்
உரைத்துவிட்டா ரில்லையென்று மறைத்துப்போட்
பொன்னென்ற ரெண்டுகரு கல்விமாயம் [டார்
பிரித்துவிட்டேன் பின்மயமீர் புயத்தில்பாரே. (249)

புயந்தனிலே குழிவிழுகும் விபூதிதன்னை
பிடித்துவைத்துச் செபித்திடவே வளரும்பாரு
மயமதனை யறிந்தவரா ருலகிலில்லை
மைந்தனே நீயறிந்தால் மருங்கேகொல்லை
அயனரிமால் மூப்மூர்த்தி விதியால்யோனி
ஆயிரங்கண் ணனதுவு மிதனுலப்பா
பயனதனை யறிந்துகொண்டு யின்னூல்தன்னை
பரமசிவன் மேலாணை பதனம்பண்ணே. (250)

## மோகினி மந்திரவிதி.

பண்ணப்பா சூரியகிராணந்தன்னில்
பார்தனிலே மோகினிதன் வசியவாலே
எண்ணப்பா செவ்வரலிப் பூநூற்றெட்டு
எடுத்துவந்து செங்கைதனில் கிழக்காய்நின்று
உண்ணப்பா காரிரவு மூடுமட்டும்
உத்தமனே சிவாயநம மோகினியங்கென்று
பெண்ணப்பா வாலோதி யிருபுயத்தில்நின்று
பேருபெற்ற தடையாளங் குளிப்பதாமே. (251)

ஆமப்பா விபூதிதனைச் செபிப்பாயாகில்
அப்பனே ஆகாசந் தன்னிற்பார்த்து
நேமப்பா தெற்கேதலை யாகவைத்து
நிஷ்டையிலே நிமிர்ந்துகொண்டு விபூதிதன்னை
காமப்பா மோகினியை நினைந்துகொண்டு
கருதியே விபூதிதனைக் குளியில்வைத்து
நாமப்பா முன்சொன்ன படியேநீயும்
நாடியே செபித்திடவே வளரும்பாரே. (252)

பாரப்பா திருநீற்றை யெடுத்துக்கொண்டு
பாரிலுள்ள மானிடர்க ளெவராலும்
நேரப்பா நினைந்துகொண்டு விபூதிபூச
நேராகக் கண்டவர்கள் பிரியமாட்டார்
ஆரப்பா யிதையறிந்தோ ரொருவரில்லை
அப்பனே நீயறிந்தா லின்னூல்தன்னை
வீரப்பா கோபமதை யடக்கிக்கொள்ளு
விருதாவில் மானிடரைத் துயர்ந்திடாதே. (253)

துயர்ந்திடுவா ருனைப்பாத்தோர் பிரியமாட்டார்
தூசணித்தார் பிரமரிஷி மாரன்றன்னை
அயன்றிருமால் மும்மூர்த்தி அனைவோர்கூடி
ஆயிரங்கண் ணுய்ச்சபித்தா ரறிவுள்ளோர்க்கு
பயந்திதை நீ தொட்டெடுத்துப் பார்த்தால்தள்ளு
பார்தனிலே மிருகமதுக் குமிழ்நீர்தொட்டு
செயம்பெறவே காட்டினால் வசமேயாகும்
திரும்பாமற் கொண்டுசெல்லு கூடத்தானே (254)

தானென்ற ஆணவத்தை விட்டு நீக்கு
தன்னைமறந் தன்னைவிட்டுப் போகமாட்டா
ஏனென்றால் வாலைமோ கினியின் மார்க்கம்
இந்தவித மானதோர் செயலேயாகும்
மானென்ற தேவாதி தேவரென்ன
மாவேந்தர்க் கோரதிகள் வரலாறென்ன
கூனென்ற வாலையுட கிருபையாலே
சோபமற்று லிவ்வகையைத் தொடுத்துப்பாரே. ()

தொடுத்துவரு மேயப்பா வுந்தன்கூட
துரத்தியடித் தாலுமது போகமாட்டார்
அடுத்துப்பா ரதுதானும் மதிகலங்கி
அறிவுகெட்டு உன்னினைவா யிருக்குமப்பா
கெடுத்துவிடுங் கர்மவிதி சூழ்ந்துதானால்
கெட்டமதி யால்மயங்கி கிருக்கித்தேறும்
கருத்துவைத்துத் துரத்திவிட்டும் பிரிந்துபோகா
கர்மவினை யுனைவந்து சூழ்ந்தவாரே. (256)

வாரப்பா குழிவிழுந்த மார்க்கங்கேளு
வாலைமயம் புயந்தனிலே சுளுக்கங்கென்று
கூரப்பா நிலையமர்ந்தோர் குழியுண்டாகும்
குறிப்பாக யிதையறிந்தோ ரடக்கிக்கொள்ளு
சீரப்பா சௌமிநூல் மார்க்கந்தன்னை
சேகரமாய் மனதடக்கி வைத்துக்கொண்டு
காரப்பா மாய்கைபெற்ற சடலந்தன்னை
கார்ப்பதற்கு யிடமறிந்து கருத்திலெண்ணே. (257)

யெண்ணப்பா யின்னாலை யுண்மையாக
என்மகனே யெண்ணியபின் னடக்கிப்போடு
தன்னைத்தா னறிந்துமே நேமநிஷ்டை
தான்புரியக் கர்மஞ்சூழ் பொருளுண்டானால்
உண்ணப்பா கொடியவிஷம் போல்நீயந்த
ஊதாரி தேடிவைத்த பொருளைத்தின்னும்
விண்ணப்பா உலகதனி லிருந்துவாழ்க
விஞ்சையெனும் நவசதுர விபரங்கேளே. (258)

நாற்பத்திமுக்கோண சக்கரம்.

நவசதுர எழுகோண வட்டத்துள்ளே
நாடியே யாத்தாளட் சரத்தைப்பூரி
சிவமதுவாஞ் சடாட்சரத்தை நடுவிற்கீறி
தொந்திவயத் தைங்கரனை வலத்தில்மாறி
தவமதுவாம் பெற்றதொரு நந்திதன்னை
தலைமேலே சுத்திவரத் தொடுத்துக்கோரி
பவமதுவே யறும்படிக்குச் சுவரில்கீறி
பார்த்திடவே நேர்நேராய் வெடிக்கும்பாரே. (259)

வெடிக்குமடா மோதிரத்தைப் போட்டாலொட்டும்
விஷரேகை யில்லாட்டால் திசைகளோட்டும்
நொடிக்குமுன்னே நகர்ந்துவரும் சிவம்நின்றாடும்
நிதிகளெல்லாங் கைவசமாம் நிறைசென்றோடும்
அடிக்குமடா அட்டசித்தும் பாணம்போலாம்
அகத்தியர்சொல் கௌமதியின் னூலைப்பார்த்தோர்
பிடித்தபிடி தவறாமல் வராகிபூசை
பெருவதற்கு யிவ்வகையின் சித்திபாரே. (260)

சித்தியாந் தாம்பூரத் தகட்டிற்கீறி
செபிப்பதற்குத் திசைவடக்குக் கலைத்தோலாகும்
பத்தியாய் ஆத்தாட்கு அங்வங்கென்று
பாலிப்பாய் லட்சமுரு சொப்பனத்திற்தோன்றும்
நித்தியமு மீரைந்து வோர்நாளிந்த
நேமநிஷ்டைப் படியாய்செவ் வரளிபுஷ்பம்
சத்தியமாய்ச் சொல்லிவிட்டோம் ரேகைகீற
சற்குருவா யோதிவைப்பாள் சார்ந்துபாரே. (261)

பாரப்பா சிதம்பரமு மிதற்குள்ளாச்சு
பரப்பிரம சொரூபமயம் வெளியதாச்சு
நேரப்பா யிதையறிந்தால் வெளிநேராச்சு
நீனிலத்தி லட்டவயி ரவனுமாச்சு
ஆரப்பா அறிந்தவர்கள் வாலையட்சரம்
அப்பனே அங்வங் நீ யும் அங்கென்று
சேரப்பா நூற்றெட்டு உருத்தா நீயும்
செய்வதற்கோர் சதுரமய ரேகைகேளே. (262)

சதுரமதாய்ப் ரேகையிட்டு ஆதிநேரே
தாக்குவாய் சாந்தமெனு முக்கோணத்தை
உதிரமய மானஉயிர் சிகாரத்துள்ளே
உண்ணிப்பா ரதின்கீழே ஸ்ரீ அங்கென்று
மதுரமதை யென்னசொல்வேன் திசைதானுலில்
மவுனமப்பா அங்வங்லங் முடியிற் சிவாயம்
எதிரான அடிவெளியில் ஓங்காளி அங்கென்று
என்மகனே நாட்டியபின் னூட்டங்காணே. (263)

காணப்பா யிப்படி நீ யெழுகோணத்தை
காரீயத் தகடதிலே கீறிக்கொண்டு
பேணப்பா முன்சொன்ன படிபோலிந்த
பிரணவத்தி னுயிரெழுத்தைச் சரியாய்ச்சேரு
வீணப்பா பலதுறையும் பார்க்கவேண்டாம்
விடையப்பா சர்வாங்க சக்கரத்தின்சூட்சம்
உண்ணப்பா யெடுத்ததொரு முறைகட்கெல்லாம்
உத்தமனே தொந்தமிடு மந்தங்கேளே. (264)

அந்தநவ முதலெழுத் தீரைந்தேகம்
அப்பனே அஞ்சுரெட்டிப் பிரிவுசாந்தம்
இந்தமுறை சிங்கமதில் ஈரேழாகும்
இப்படியே யிருநான்கிற் பிரிவிலாறு
சந்தமெனுங் கன்னியதிற் மூன்றதாகும்
சார்ந்ததொரு தகர்தனிலே யாறதாகும்
பந்தமப்பா புந்திதனி லிருநான்கேழு
பார்தனிலே யகண்டவெளி முன்னுன்கொன்றே. ( )

ஒன்றான இப்படியே அன்பத்தொன்று
உகந்துநீ கீறியபின் னுலகந்தன்னில்
குன்றான மலைகிரிகள் நகலுமார்க்கம்
கூறியதோர் படிமுறையின் விதியின்மூர்க்கம்
நின்றாடுஞ் சித்துமுறை வராகிகோணம்
நிட்சயித்துக் கீறுதற்கு முறையின்தீர்க்கம்
நன்றாக நாம்வெளியா யுரைத்தோமப்பா
நாடியிதைப் பூசைசெய்து நயந்துபாரே. (266)

நயந்துபார் நாற்பத்து முக்கோணந்தன்னை
நலமான ஆதிகுரு நெஞ்சந்தன்னில்
மயந்துதிசெய் தோதிவிப்பார் தெரிசனத்திலப்பா
மயங்காதே விருதாவில் பலநூல்பார்த்து
பயனறிய மாட்டார்கள் விருதாமூடர்
பார்தனிலே விதவிதமாய்க் கோடுகீறி
செயலறியார் நிர்மூடர் பலனொன்றில்லை
செபித்திடவே சர்வமுமுன் சித்தியாச்சே. (267)

ஆச்சப்பா மூன்முறையின் விதியினாலே
அல்லவென்றால் யாதொன்றும் பலனொன்றில்லை
பேச்சப்பா வீண்பேச்சு கதைநேராச்சு
பேறுபெறப் பலனொன்றும் வழியொன்றில்லை
யேச்சப்பா யிவனாலே வகையுண்டாச்சு
என்மகனே சௌமிய நூல் வெளியதாச்சு
காச்சப்பா முன்சொன்ன முறையினாலே
கருத்தறிந்து பலவகையும் பிரித்துக்கீறே. (268)

மோடி

கீறியதோர் சக்கரத்திற் பணத்தைக்காசை
கீறிவைத்து நவதான்யம் பலபயறுவிபூதி
தேறியதைக் கலவிச்சு யிதனிலிட்டு
தியானித்து சக்கரத்தின் முன்னேவைத்து
மாறியதை வாரியெறி வண்டுதும்பி
மைந்தனே பறந்தடிக்கு மெவரானாலும்
சீறியதை மோடியென்று யெடுக்கமாட்டார்
செகந்தனிலே செக்குலக்கை செய்திகேளே. (269)

செக்குலக்கை தனை நிருத்திச் சங்கிலியினோடு
செபித்ததொரு விபூதிதனைப் பூசிப்போடு
பக்கமதில் வாருகோல் செருப்புக்கேளீர்
பறந்தடிமுன் திருநீறு தொட்டுச்சாடு
சிக்கெனவே ருட்டொன்று சுழட்டியாட்டு
சிறந்துகொடு சாத்தையள்ளிச் சிரசிற்கூடு
வெக்கமதை யென்னசொல்வேன் ஓகோகேடு
விகிர்திபெற அடித்துருட்டு விபூதிபூசே. (270)

பூசியதோ ருட்டைதனைச் சுற்றக்கேளு
பூட்டக மறிந்தெதிரி செருப்பைக்கீறி
வீசியே யெறியுமுன்னே ருட்டைநீயும்
விசைகொண்டு சுற்றிவிடு வந்துசேரும்
தேசியெனுங் கழுதைபரி குதிரைப்பாந்தில்
சிந்தித்த யிடமெல்லாம் பணம்போய்ச்செல்லும்
மாசியே அந்தரங்கம் வெளியாய்ச்சொன்னோம்
மைந்தனே நீயறிந்து மனதிற்கொள்ளே. (271)

கொள்ளப்பா குறிப்பானதொரு மார்க்கந்தன்னை
கூறியதோர் முறைப்படிநீ தவறுமற்றுன்
தள்ளப்பா அடங்கோப மிரண்டுந்தொல்லை
தாரணியில் மோடிவித்தைக் கிணைவேறில்லை
உள்ளப்பா வகமுனக்கு வெளியாய்ச்சொன்னோம்
உத்தமனே மோடிவித்தை யதிகமார்க்கம்
தள்ளப்பா சீசீசீ யதுவேகொஞ்சம்
சாமீப போகமயஞ் சாற்றக்கேளே. (272)

சாற்றுகிறேன் சிலசூஸ்திர விதியின்போக்கு
சார்புநிலை யறியாத மதிகெட்டோர்க்கு
வேற்றுமொரு கெண்டியொன்று கூகமான
விலாசமுள்ள கிணறதனில் கவிழ்த்திமூடி
சேத்துநீ கயர்கொண்டு கெண்டிதன்னில்
சேர்த்திருக்கிப் பாலமதில் நடுவில்தூக்கி
போத்துவாய் பீதாம்பர வஸ்திரத்தால்
போற்றியபின் சிவமயத்தை யடைந்திடாயே. (273)

அடைத்திடுவாய் சிவமயத்தை யிழுத்துநீயும்
அப்பனே யிழுத்துவிடு கிணற்றுத்தண்ணீர்
புடைத்துப்பா ராகாச கெங்கைமார்க்கம்
பொழிந்தபடி போலருவி தெளிந்தசாய்கை
விடைத்திருப்பா ரித்தைநீ யறிந்தாயாகில்
விஞ்ஞையென்ற யேத்துமதி யிறக்குமதிபோக்கு
கிடைத்திடுமோ மலைகனக நிதியீய்ந்தாலும்
கிரிகையென்ன யோகமென்ன கௌமதியைப்பாரே

## யோகநிலை.

கௌமதியிற் கெவுனமுறை மார்க்கங்கேளு
இருநயையுற்ற வெழுத்தெனுமட் சரத்தையோது
மௌமதியா யிதையறிந்தோர் நிலையாய்நின்று
மனந்துணிந்து உருசெபிக்கில் மதியின்மார்க்கம்
சௌமதியாஞ் சுவாசமெனுஞ் சுழியிற்சிக்குந்
தனையறிந்து கண்டிக்கும் வழியுந்தோணும்
பௌமதியில் சிவஞ்சுழித்து மலக்கட்டெல்லாம்
பரிசோதித் தலம்பிவிடும் பாசமற்றே. (275)

பாசமற்ற பேர்களுக்கு நிலைநின்றேதான்
பார்த்தவுடன் கடிகையொன்றில் தோற்றும்பாரு
ஆசமற்ற தனமாசை பிள்ளையாசை
அறிவுகெட்ட மயலாசை காமவேசை
நேசமற்ற மண்ணாசை யிவைகள்சேர
நினைத்திருக்கும் நிர்மூடர்க் கிதுகிட்டாது
வாசமற்ற வூணாசை பூணுமாசை
வஞ்சனைகள் செய்விதங்கள் மார்க்கம்பின்னே. (276)

பின்னாசை பெண்ணாசை பிறவியாசை
பிரியாத மனக்குரங்கு விகர்ப்பமாசை
தன்னாசை யுள்ளதெல்லாம் வெறுப்பானாகில்
தவசிமேற் றுருவமயந் தோற்றும்பாரு
இன்னாசை கௌமதிநூ லாசைவைத்து
யியங்குமன மயங்குநினை யோகஞ்செய்ய
மின்னாசை கொண்டவன்போ லின்னூலாசை
மிகழ்ந்துகவ ரிகழ்ந்துவிடான் விரும்புவாரே. (277)

விரும்புவான் சிவயோகஞ் செய்வோமென்பான்
வீடக்கான் குரும்பொடுக்கான் அடமும்போக்கான்
இரும்புருக்கி ரசவாதஞ் செய்வோமென்பான்
யித்தலத்தி னில்லாத்தி னாசையாலே
அரும்புருக்கு கனநிமிளைத் தாளையூணி
அரிவையெனு மனவிமக்கட் காகவேண்டும்
சுரும்புமய மானஉரு சிவத்தின்கூறு
சொல்லவொண்ணா ஆசையது துலைக்கக்கேளே. ()

துலக்கக்கேள் முன்சொன்ன ஆசாபாசம்
துலைத்து நீ சிவயோக மார்க்கம்பாரு
வலைக்குள்ளே சிக்கிநின்ற மச்சம்போலே
வகைதெரிந்து உனதுமனக் குலைக்குள்ளேதான்
சிலைக்கக்கேள் உற்றபொறி கரணமாசை
செகத்தில்தா தாக்கள்மெய்க்கக் கண்ணைமூடி
புலைக்கக்கேள் கைவிரித்து யிருக்கும்பேர்கள்
புத்திகெட்ட நிர்மூடர் புகழத்தானே. (279)

புகழவே கைவிரித்து யிருக்கும்பேர்கள்
பூவுலகில் கண்கெட்ட குருடர்மூடர்
இகழவே விருதாவில் மனதைப்போக்கி
இருந்ததினால் யாதொரு பலனுமில்லை
நிகழவே பலகதைகள் வீண்போக்கப்பா
நீயறிந்து ஓர்நிலையாய் கடிகைநேரம்
அகழவே அனுகூலஞ் சுவாசந்தன்னை
அலையாமற் கலையாமல் அனுஷ்டிப்பாயே. (280)

அனுஷ்டிப்பாய் சுவாசமதை யடக்கவேண்டாம்
அப்பனே யோர்நிலையில் நிலையாய்நில்லு
தனுஷ்டிப்ப மானதொரு தவளைச்சங்கு
தாளிசையிற் சின்னமுறை யூதும்நாதம்
கெனுஷ்டிப்பாய் சிங்கநா தத்தின் வாத்யம்
கேட்டிலையோ அவ்விதியின் படியின்தீர்க்கம்
இனுஷ்டிப்பா யிப்படியே இடங்கள்தோறும்
இருந்தாடுஞ் சிவமகிமை யினிதுபாரே. (281)

பாருநீ யின்னமொரு வகைதானப்பா
பார்தனிலே காளையார் கோவில்காட்டில்
நேருநீ யதின்மேற்கே மூலையொன்று
நெடுந்தூர மல்லவிடு காதம்நாலு
சேருநீ யங்கேயொரு காளிகோயில்
சிவசத்தி பீடமதில் நேர்தாக
தாருநீ பார்த்திடுவாய் ரெண்டேயுண்டு
துள்ளுகுட்டி கொள்ளுகட்டி சூட்சந்தானே. (282)

தானான மரங்கள்ரெண்டும் பேரேதென்னில்
தாவிப்பே னுந்தனுக்கு விபரமாக
ஏனால் ரசகுளிகை ராஜாளிவிருட்சம்
ஏறுசின்னி யிறங்குசின்னி யென்றுபேராம்
ஆனால்தீ யதினுடைய பழத்தைவாங்கி
ஆடிதனில் பௌரணையில் பாதிப்போதில்
வேனாகப் பழுத்துதிரும் வேளைபார்த்து
வேண்டிவா கடிகையொன்றில் மறந்திடாதே.(283)

மறந்துவிட்டால் பழுத்தபழம் உயரயேறும்
மானிடரில் பேருபெற்ற பதினெண்பேரும்
பறந்துவந் தெடுத்திடுவார் முன்னதாக
பார்த்தவுட நீயறிந்து யெடுத்துக்கொள்ளு
நிறந்துதியை யென்னசொல்வேன் ரத்தம்போலாம்
நிமிளைகட்டும் ராசாளி நிவர்த்திகேளு
துரந்துதியாம் நாற்பத்தி மூக்கோணநீறு
தொகுத்தறிந்து செபித்தெரிந்து செல்லுவாயே. ()

கெவுனம்

செல்லுவா யிதினுடைய மார்க்கங்கேளு
சென்றெடுத்துக் கொண்டுவந்து கனியின்சத்தை
கொல்லுவா யிடைக்கிடைதான் நிமிளைசேர்த்து
கொண்டுவந்து குடகரியில் கொடுத்துப்பாரு
வெல்லுவா யாகாச கெவுனமார்க்கம்
விஞ்சைபெற்றுக் கயிலாச மேருயேறும்
வல்லுவாய் கொப்பரையில் வங்கம்போட்டு
மைந்தனே உருக்கியிந்தக் குளிகைபோடே (285)

போடப்பா ரசகுளிகை போட்டமார்க்கம்
பூர்வீகச் சத்துவிஷ நீரோடெல்லாம்
காடப்பா அக்கினிக் காடாய்க்கிண்டு
கடந்துபோ யப்புரத்தில் குதிகொண்டாடும்
தேடப்பா அதையெடுத்துக் கெவுனமார்க்கம்
தெரிவதற்கும் மறிவதற்குந் திரமிதாச்சு
ஓடப்பா நினைத்தவிட மெங்கெங்கேனும்
ஓடிநொடி நேரமதில் திரும்புப்பாரே. (286)

திரும்பவுமே யின்னமொரு வகைதான்கேளு
திருமூல வஸ்துவெனுஞ் சத்துநீதான்
அரும்பொருளின் சமையகுரு வாதிமூலம்
ஆணரசு பெண்ணரசு அறிவின்செய்கை
விருப்புநே ரித்தனேபித் தென்றுஞ்சொல்வார்
வீணாதி வீணர்செய லறியமாட்டார்
சிரும்பகளி பெருங்குறளி சற்றேதோன்றும்
செகந்தனிலே பதினெண்பேர் மறைத்திட்டாரே. ()

தாம்பூரபற்பம்

மறைத்திட்ட வஸ்துவது வெளியாய்ச்சொல்வேன்
மைந்தனே தாம்பூர பற்பம்நீற்ற
உரைத்திட்ட சிருகுறலாந் தீப்பூடென்று
உத்தமனே யிவ்வகையின் பேரொன்றாச்சு
மூறைத்திட்ட மறியாமல் பலநூல்பார்த்து
மூடர்களாய் வெகுபேர்கள் கூடிக்கூடி
நிறைத்திட்ட மறியாமல் புல்பூடெல்லாம்
நீனிலத்தில் லரைத்தெடுப்பான் செத்தமாடே. (288)

செத்தேத்துஞ் சிறுகுரலுந் தவளைப்பித்து
சேர்த்தரைத்துத் தாம்பூரக் காசிற்பூசி
சுத்தத்து யீரமற ரவியில் வைத்து
செய்புடமாங் கவசமிலாப் புடத்தில்போட
சத்தத்து துய்யமலர் நிறமுண்டாச்சு
சாட்டப்பா தாம்பூரக் கட்டியெல்லாம்
ஒத்தத்து யிடைக்கிடை நீ கனமாய்ப்பூசி
ஒழுங்காய்ப்பின் பத்தெருவிற் புடத்தைப்போடே ()

போடப்பா பலமொன்றில் எருத்தான்பத்து
போட்டிடவே அந்தயிடைக் கிடைதான்செய்பூ
தேடப்பா பத்துக்கொன் றுகநீயும்
தேடியதோர் தாம்பூரஞ் சரியாய்நீத்து
ஆடப்பா யிப்படி நீ முறைதப்பாமல்
அணுவளவு தப்பிவிட்டால் புகைந்துபோச்சு
நாடப்பா வடநாடு தேசந்தன்னில்
நாடியே கண்டுகொள்ள விபரங்கேளே. (290)

விபரமப்பா ஆனைமலைக் காட்டில்நேரே
விருச்சிகத்தின் திங்களந்தம் விரும்பிச்செல்லும்
துபரமப்பா கைச்சிலையில் உறைதான்போடு
துணியாமல் கெணித்தரைத்து யிலையால்மூடு
தபரமப்பா யந்தயிலைச் சீலைதன்னில்
கசக்கியே மசக்கையில் தீப் பிடிக்கும்பாரு
நிபரமூற்ற யிலைக்குமே யங்வங்கென்று
நீணிலத்தில் பதினெண்பேர் மறைத்திட்டாரே. ()

தீப்பூடு

மறைத்திட்டார் காளையார் கோவில்காட்டில்
மைந்தனே நாதாக்கள் பதினெண்பேர்கள்
விரைத்திட்டா ரதுகாண மாட்டாயப்பா
விருதாவி லலையாமல் அதின்மேற்காக
வரைத்திட்டார் மலையோரங் கொடியகாட்டில்
வழியறிந்தா லிருக்குமிடந் தீப்பூடென்று
உரைத்திட்டா ரத்தலத்தோ ரனைவோர்சேர
உத்தமனே யதையறிந்து பிடுங்கிக்கொள்ளே. (292)

பிடுங்கிநீ யரைப்பதற்கு விபரங்கேளு
பிதற்றாதே ஆட்டுத்தோல் கவசம்பூணு
நடுங்கிடுவார் நஞ்சென்பார் தீப்பூடென்பார்
நாட்டிலொன்று மறியார்கள் நாதன்மூலம்
ஒடுங்கிநீ முகமாக வைத்துக்கொண்டு
ஓரிடைக்கு நேரிடைசேர்த் திடுநீபற்பம்
நெடுங்கியெனுங் கொல்லாத நஞ்சுதன்னை
நீயறிந்தா லந்தச்சார் தன்னிற்போடே (293)

போடப்பா பாம்புநஞ் சதனைவாங்கி
போட்டிடவும் மந்தச்சார் சரியிடைதான்சேரு
கூடப்பா வொன்றுமில்லை விஷமுமில்லை
சூட்சமப்பா உண்டுபார் மதுரமாச்சு
ஆடப்பா யிப்படிநீ யவித்தபச்சை
ஆவின்வெண்ணை தனையெடுத்து யிந்தச்சாற்றில்
சாட்டப்பா அருகுநுனி திவலைநீயும்
சாடியபின் கடிகையொன்றில் நீறிப்போச்சே. (294)

